# ஓர் இதயத்தின் ஏக்கம்

கலைமாமணி

**கவிஞர் பொன்னடியான்**

ஆசிரியர் '**முல்லைச்சரம்**' திங்கள் ஏடு.

வெளியிடுவோர்

**மீனா கோபால் பதிப்பகம்**

புதிய கதவு எண் 26, குறுக்குத் தெரு,
சோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம்,
சென்னை – 600 088, ✆: 2253 3667.

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | – | **'ஓர் இதயத்தின் ஏக்கம்'** |
| படைத்தவர் | – | கவிஞர் பொன்னடியான் |
| முதற்பதிப்பு | – | 2009 |
| மொழி | – | தமிழ் |
| பக்கங்கள் | – | 144 |
| படிகள் | – | 1200 |
| நூலின் அளவு | – | டெம்மி |
| அச்செழுத்து | – | 11 புள்ளிகள் |
| விலை | – | ரூபாய் **80/–** |
| கட்டுமானம் | – | சாதா அட்டை |
| கணிப்பொறி அச்சு | – | ஸ்ரீ வெங்கட் கிராபிக்ஸ், திருவேற்காடு. |
| அச்சிட்டோர் | – | **ராயல் அச்சகம்**<br>இராயப்பேட்டை,<br>சென்னை. |
| பொருள் | – | குறுங்காவியம் |



அவர்களுக்கு...

தங்கள் வாழ்வில்
காதல்மணம்
கலப்புமணம் புரிந்து
வெற்றி கண்டவர்க்கும்
அம்முயற்சியில்
கருகிப்போய் கண்ணீர்க்
கதையானோர்க்கும்
இந்நூலைக் காணிக்கை
யாக்குகின்றேன்.

— ஆசிரியர்

# நாம் ஒருபோதும்...

“ கலப்புமணம் பெருகட்டும் இந்த நாட்டில்
காதல்மணம் பரவட்டும் இந்த நாட்டில்
கலப்புமணம் செயத்துடிக்கும் காதலர்க்குக்
காப்பளிக்கத் துணியட்டும் அரசு; நீண்ட
நிலப்பரப்பில் சாதி, மதப் பாகுபாடு
நெருப்பண்டா திருப்பதற்கே உழைப்போம் நாமே
.....................”

என்ற என் இதய வேட்கையின் உள்ளடக்கமே இக்குறுங் *காவியம்!*

*ஏறக்குறைய 42 ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட என் கவிதை வரிகளுக்கு இன்று நல்ல விடை கிடைத்திருக் கிறது. என் ‘முல்லைச்சரம்’ இதழில் 1967-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இக்குறுங்காவியத்தை எழுதத் தொடங்கி, 1968-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இதழில் முடிவுற்றது. “நாடு, மொழி, சமுதாய நலன் சார்ந்த எழுச்சியும் விழிப்புணர்ச்சியும் சார்ந்த கவிதைகளே எழுதி வருகின்றீர்களே - அகத்துறை சார்ந்த காதல் கவிதைகளும் எழுதுங் கள்” என்ற என் அன்பர்களின், நண்பர்களின் வேண்டுகோளும் இப்படைப்பின் பூப்பிற்கு ஒரு காரணம்!*

*இதழில் இத்தொடர் தொடங்கி முடியும்வரை, ‘முல்லைச்சரம்’ வாசகர் வட்டாரத்திலும் குறிப்பாக இளைய சமுதாய இலக்கியப் படைப்பாளர் வட்டாரத்திலும் ஏற்படுத்திய எழுச்சியை, பரபரப்பை இன்றும் நம்முடன்*

வாழ்ந்துகொண்டிருக்கின்ற அந்நாளைய இளைஞர்கள் குறிப்பாக கவிஞர்கள் அறிவார்கள். பலர், "அதற்குள் ஏன் முடித்துவிட்டீர்கள்?" என்று உணர்ச்சி வசப்பட்டனர். "மீண்டும் தொடருங்கள்" என்று வேண்டுகோளும் விடுத்தனர்.

"நீங்கள் எழுதிய ஏக்கவரிகளை என்காதலிக்கு நான் எழுதிய வரிகளாக எழுதி நம்பவைத்துக் காதலில் வெற்றி பெற்றவன் நான்" என்று உரைத்து மகிழ்ந்தவர்கள்பலராகி இன்றும் என்னுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்ற கணக்கு, என் கற்பனைக்கும் - எழுத்துக்கும் உரமூட்டும் கணக்காகும்.

இன்றும் இக்குறுங்காவியத்தைக் கையில் எடுத்துப் படிக்கும் போதெல்லாம் இதைப் பல்லாண்டுகளுக்கு முன் நான் எழுதியபோது அடைந்த மகிழ்ச்சியைப் பன்மடங்காக அடைகின்றேன். இதன் ஒவ்வொரு வரியும் என் அன்றைய உணர்ச்சிகளின் வண்ணப் படங்களாகி ஒளி முகங்காட்டி என் கண்களில் களிநடம் புரிகின்றது.

**" தமிழரெலாம் 'ஓரினத்தார்' என்ற செய்தி**
**தழுவட்டும் தமிழ் நெஞ்சை; இனிமேல் பூக்கும்**
**தமிழரெலாம் ஒருதாயின் பிள்ளையாகத்**
**தவழட்டும் தமிழ்நிலத்தில்; வருங்காலத்தில்**
**தமிழரெலாம் உலகோடு தோள்பிணைத்துத்**
**தலைநிமிர்ந்து நடக்கட்டும் புகழ்ப் பூரிப்பில்"**

என்ற என் தமிழ் தேசிய, உலக தேசிய வேட்கையும் வெற்றி நடை போடும் காலம் தொடங்கிவிட்டது.

இன்று, நாளும் நாட்டில் காதல் மணங்கள், கலப்பு மணங்களின் பெயரால் நடைபெற்றுக் கொண்டிருக்கும் கேலிக் கூத்துகள், குழப்படிகள், கொடூரங்கள் பல.

நாம், ஒருபோதும் பொருந்தாக் காதலை, புரிந்துணர் விலா, பருவம் வரா, பக்குவப்படாக் காதலை ஆதரிப்பதில்லை. மேனிக் கவர்ச்சி, பொருளாதார நப்பாசை போன்றவைகளின் அடித்தளத்தில் அமைந்த காதலை, கலப்பு மணத்தை நாம் எப்போதும் ஏற்பதில்லை. குறிப்பாக பெற்றோரை, உற்றாரைப் புறக் கணித்துப் புண்ணாக்கும் புரியாத்தனக் காதலுக்கு நாம் கைதூக்குவதில்லை. அதற்கு இக் குறுங் காவியத்தில் ஆங்காங்கே பளிச்சிடும் முத்தான வரிகளே சான்றாக அமைந்துள்ளன.

இன்னும் சொல்லப்போனால், முறையாக ஒருவர்க்கு ஒருவர் அறிவித்துப் புரிந்துணராமல், பெற்றோர்க்கும் தெரிவிக்காமல் அவசர கோலத்தில் செயல்பட்ட இக் குறுங்காவியத்தின் கதை நாயகர்களான பண்ணரசன், பொன் மலர் ஆகியோரின் கருத்துக்கும், செயலுக்கும் நானே இப்போது முரண்படுகின்றேன் என்பதே உண்மை!

இந்நூலின் முதல் பதிப்புக்கு (1969) என்றும் என் வணக்கத் திற்குரிய பெருமக்களான பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், பேரெழுத்தாளர் அகிலன் இருவரும் வழங்கியுள்ள அணிந்துரை, பாராட்டுரை இனிவரும் படைப் பாளர்களுக்கும் வழிகாட்டுபவை.

பல்வேறு சிறப்புகளோடு ஒளிமுகங்காட்டும் இப்புதிய பதிப்புக்கு ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ள தமிழகம் நன்கறிந்த புகழ்மிக்க கவிஞர், பேராசிரியர், முனைவர் வான்முகில், கல்வியாளர் கவிஞர் இந்திராபாய் ஆகியோருக்கும், மிகச் சிறப்பாக இந்நூலை வெளியிடுகின்ற பதிப்பகத் தார்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்,
**பொன்னடியான்**

'முல்லைச்சரம்'
சென்னை – 600 002.
94444 60748.

# பதிப்புரை

நாள்தோறும் கவிதைகள் நெஞ்சிலே நடனமாட ஆக்கம் தேடுகின்ற தொண்டுள்ளம் படைத்த கவிஞர் பொன்னடியான் என்றால் கற்பனை கலவாத செய்தியாகும். இலக்கிய உலகில் கடலையே கவிதை கேட்க வைத்தவர். கடற்கரையைக் கவிதையின் அரங்கமாக மாற்றிக் காட்டிய சாதனையின் முதல்வர்.

தமிழ்நாட்டில் எண்ணற்ற கவிஞர்களை மக்கள் நெஞ்சிலே எழுந்து நடமாடச் செய்தவர். இவரால் அறிமுகம் ஆனவர் ஆயிரம் பேர்.

'முல்லைச்சரம்' என்னும் ஏட்டினைத் தொடர்ந்து நாற்பத்து நான்கு ஆண்டுகளாகச் சோர்வின்றி நடத்திவரும் ஆற்றல் மிக்கவர். ஆயிரக்கணக்கான கவிஞர்களைத் தம் ஏட்டின் மூலம் ஆளாக்கினார். திறமையாளர்களைக் கண்டறிந்தார் – அவர்களை ஊட்டி வளர்க்கவில்லை – போற்றி வளர்த்தார் என்றே கூறலாம்.

இவருடைய இலக்கியத் தொண்டினைப் பாராட்டி ஐ.நா.வின் கிளை அமைப்பான 'யுனெஸ்கோ' 'ஒடுக்கப்பட்ட மக்களின் எழுச்சிக் கவிஞர்' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

தமிழக அரசின் 'பாவேந்தர் பாரதிதாசன் விருது' 'கலைமாமணி விருது' 'தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனார் இலக்கிய பரிசு' போன்ற விருதுகளைப் பெற்றுள்ளார்.

இவர் இயற்றிய படைப்புகளுள் ஒளிமிகுந்த ஒப்பற்ற படைப்பாகத் திகழ்வது இந்நூல். 'முல்லைச்சரத்'தில் இது தொடராக

வெளிவந்தபோது நாடறிந்த கவிஞர்கள் எல்லாரும் இதைப் படிக்கக் காத்துக் கிடந்தார்கள் என்பது நேரில் அறிந்த செய்தியாகும்.

இப் படைப்பை எங்கள் பதிப்பகம் வாயிலாக வெளியிட வாய்ப்பளித்த பெருமதிப்பிற்குரிய கவிஞர் பொன்னடியார் அவர்களுக்கு மிக்க நன்றி.

மரபிலே தோன்றிய மகுடம் இந்நூல். தெவிட்டாத தேனை ஏட்டிலே தீட்டும் வித்தையைக் கவிஞர் காட்டுகிறார்; இளையோரே! வளையோரே உங்கள் உணர்ச்சிகள் பேசப்படுகின்றன. வாருங்கள் ! கவிஞரின் கவிதை வித்தைகளைக் காண்போம் – கண்டுகளிப்போம்!

பதிப்பாளர்

# முதல்வரின் வாழ்த்துரை






மு. கருணாநிதி
முதலமைச்சர்

தலைமைச் செயலகம்,
சென்னை – 600 009.

நாள்: 28–06–2000

## வாழ்த்துச் செய்தி

"கவிஞர்களை வளர்க்கும் கலைஞர்" எனப் புகழப்படும் கவிஞர் பொன்னடியான் அவர்களின் நாற்பது ஆண்டுகால இலக்கியப் பணிகளைப் பாராட்டுமுகத்தான், சென்னையில் விழா ஏற்பாடு செய்யப்படுவதும், அதனையொட்டிச் சிறப்புமலர் ஒன்று வெளியிடப் படுவதும் அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

1990- ஆம் ஆண்டில் இந்த அரசினால், 'பாவேந்தர் விருது' வழங்கிப் பாராட்டப் பெற்ற பெருமைக்குரிய கவிஞர் பொன்னடியான், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் அன்புக்குரிய நன்மாணாக்கர். அவரது, 'குயில்' ஏட்டின் உதவி ஆசிரியராக விளங்கிய சிறப்பைப் பெற்றவர்; முப்பது ஆண்டு களுக்கும் மேலாக கடற்கரைக் கவியரங்கம் நடத்திப் பாவேந்தர் பரம்பரையை வளர்த்து வருபவர். முப்பத்தைந்து ஆண்டுகளாக 'முல்லைச்சரம்' கவிதை இதழை நடத்தி வரும் இலக்கியப் படைப்பாளி இவர். இவர் பணிகள் தமிழ் இதயங்களால் போற்றத் தக்கவை.

இவர்தம் இலக்கியப் பணிகளைப் பாராட்டி எடுக்கப்படும் விழா இனிதே நிகழ்ந்தேறவும், வெளியிடப்படும் சிறப்புமலர் தமிழ்த்தொண்டு புரிவோரை மகிழ்வித்து, எழுச்சியூட்டிக் கிளர்ந்தெழச் செய்வதாய்த் திகழ்ந்திடவும் என் உளமார்ந்த நல்வாழ்த்துகள் உரித்தாகுக.

அன்புள்ள,

# துணைமுதல்வரின் வாழ்த்துரை





மு. க. ஸ்டாலின்
மேயர்

சென்னை மாநகராட்சி
ரிப்பன் கட்டடம்,
சென்னை – 600 003.

நாள்: 29–05–2000

## வாழ்த்துச் செய்தி

கலை இலக்கியத் துறையில் அருந்தொண்டாற்றி வருபவரும் 'முல்லைச்சரம்' பத்திரிகையின் நிறுவனரும், ஆசிரியருமான கவிஞர் பொன்னடியார் அவர்களின் 40 ஆண்டு கால இலக்கியப் பணியைப் பாராட்டி விழா எடுத்து மலர் வெளியிட இருப்பது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

புட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் மாணவராக இருந்து தொண்டாற்றிய பெருமைக்குரியவர். இல்லத்திலேயே இலக்கியப் பணியைச் செய்து புகழ் பெற்றவர். புதுமை நிகழ்ச்சியான கடற்கரைக் கவியரங்கத்தின் தந்தையாக விளங்குபவர். திரைப்படங்களில் பிரபலமான பாடல்களை எழுதியவர் என்ற பெருமை கவிஞருக்கு உண்டு. பல அரிய நூல்களைப் படைத்து, இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து வருபவர் கவிச்செம்மல் திரு. பொன்னடியார்.

விழா சீரும் சிறப்புடன் நடைபெறவும், மலர் சிறந்த கருத்து களைத் தாங்கி மணம் பரப்பவும், இலக்கியப் பணி மென்மேலும் சிறப்புடன் நடைபெறவும் என் நெஞ்சம் நிறைந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மு. க. ஸ்டாலின்
மேயர்

# புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தம் 'குயில்' ஏட்டில் பொன்னடியார் பற்றி!



சென்ற குயிலில் (15 – 1962) பிழைகள் ஏராளம். அதற்குக் காரணம் இன்னும் அலுவலினரை வேண்டிய அளவு அமைக்காததே. இப்பொழுது அலுவல் பார்த்து வருகின்றவர்கள் எத்தனை பேர் என்பதையும் இப்பொழுது சொல்லிவிட எண்ணுகிறோம். 10 பேர் இருப்பார்கள் என்று எண்ணிவிட வேண்டாம். அல்லது 5 பேர் இருக்கலாமோ என்று நீங்கள் எண்ணிவிடக் கூடும்.

*நான் ஒருவன்,. பொன்னடி ஒருவர்.*

*சென்ற இதழில் பிழை பார்க்க ஆள் இல்லாததால், இருப்பவர்க்கும் ஓய்வில்லாததால், இலக்கணப் பிழை மிகுதியாயிற்று. அதற்காக வருந்துகிறோம்.*

*'குயில்' (15–02–1962)*
*தலையங்கம்*

# முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்

## பாராட்டு



(கவிஞர் பொன்னடியார் இலக்கியப்பணி வெள்ளி விழாவில் தலைமை தாங்கி 'எழுச்சிக் கவிஞர்' எனும் பாராட்டுப் பட்டயம் அளித்து முத்தமிழ்க் காவலர் வாழ்த்திய வாழ்த்துரையில் சிறு பகுதி - 1985)

எல்லோரும் பேசுவார்கள். அவர்களால் செயல்பட முடியாது. கோடை இடி இடிக்கும். குளம் நிரம்பாது. மழை பெய்தால்தான் குளம் நிரம்ப முடியும். ஆகவேதான் செயற்கரிய செய்பவர்களைப் பெரியவர் என்கிறார் திருவள்ளுவர். ஓர் பத்திரிகையை (முல்லைச்சரம்) தொடர்ந்து 22 ஆண்டுகள் (1985) நடத்துவது என்பது செயற்கரிய செயல்தானே. 17 ஆண்டுகளாக (1985) கடற்கரைக் கவியரங்கத்தை, இலக்கிய இலக்கண வகுப்பை நடத்தித் தமிழ்க் கவிதை இலக்கியத்தை வளர்ப்பது என்பது செயற்கரிய செயல்தானே. இத்தகைய அரிய செயல்களைச் செய்து வருவதோடு இளைஞர்களை வழி நடத்துவதாலும் பொன்னடியார் பெரியவர்தானே ?



கவிஞர் பொன்னடியார்

# கவிமேதை வாலியும்
# கவிஞர் பொன்னடியாரும்!



கவிஞர் பொன்னடியார் அவர்கள் கவிதை மீதும், தன்னலங் கருதாக் கவிதை இலக்கியப் பணிகள் மீதும் மிகுந்த பற்று வைத்துப் பாராட்டத் தவறாதவர் கவிஞர் வாலி அவர்கள். அவர் கவிஞர் பொன்னடியார் அவர்களின் 'முல்லைச்சரம்' பத்திரிகையைப் பல ஆண்டுகளாக வரி விடாமல் படித்து, வாரி வாரி பராட்டுகளைப் பொழிபவர். கவிஞர் எழுதும் தலையங்கம், பொன்னடி பதில்கள், கட்டுரைகள் அனைத்தையும் படித்து அக்கு வேறு ஆணி வேறாகத் திறனாய்வு செய்யவும் தவற மாட்டார் கவிமேதை வாலி.

கவிஞர் பொன்னடியார் அவர்களின் கவிதை முதல் தொகுதி வெளிவந்திருந்த நேரம் (1976). அந்நூலை முழுமையாகப்

படித்து ரசித்து கவிஞர் பெருமான் வாலி அவர்கள், கவிஞர் பொன்னடியாரைப் பாராட்டி ஒரு பாராட்டுக் கடிதம், பாராட்டுக் கவிதையுடன் எழுதினார். இதோ அந்த அரிய கடிதம்:

**வாலி** 22–09–1977
சென்னை

கவிஞர் பொன்னடியார்க்கு, வணக்கம்.

நலம். நாடுவதும் அதுவே.

தங்கள் கவிதை நூலைப் படித்தேன். குடம் தேனைக் குடித்தேன். அந்த போதையில் கீழ்க்கண்டவாறு என் உணர்வினை வடித்தேன்.

**பொன்னடியார்; பொருளடியார்**
**புகழடியார் என்றெல்லாம்**
**பன்னடியார் படிமிசையாம்**
**பார்த்தறிவோம்; பாட்டாளர்**
**தன்னடியான் தானென்று**
**தைரியமாய்த் தெரிவிக்கும்**
**பொன்னடியான் ஒருவன்தான்**
**பொதுவுடமைக் கவி என்பேன்!**

***–வாலி***

இப்படிக் கவிஞரை, அவரின் படைப்புகளை மனந்திறந்து அவ்வப்போது பாராட்டி வரும் கவிஞர் வாலி அவர்கள் மற்றொரு முறை (கவிஞரின் இலக்கியப் பணி வெள்ளி விழா மலரும் – 1985) கவிஞர் பொன்னடியாரை வாழ்த்தி அருமையான ஒரு கவிதை எழுதி அனுப்பினார். திரைப்படத் துறையில் மூன்று தலைமுறைப்

புகழுக்கு உரிய அவர் கவிஞர் பொன்னடியான் அவர்கள் மீது வைத்திருக்கும் பேரன்புக்கு இக் கவிதையே நற்சான்று. இதோ அந்தக் கவிதை: நீங்களும் படித்துச் சுவையுங்கள்.

வாள்போலும் கூர்த்தமதி;
வெள்ளைவெளே ரென்றிருக்கும்
தான்போலும் தூய நெஞ்சம்;
தமிழ்கற்றார் தமையெல்லாம்
கேள்போலும் ஏற்கும் பாங்கு;
கீர்த்திமிகு செழுந்தமிழ்
வேள்போலும் நான்மதிக்கும்
வித்தகனாம் பொன்னடியாம்!

x x x x

இழுக்கைச் சிந்தை யாலும்
இயற்றிட எண்ணி டாதான்
அழுக்கை என்ன வென்றே
அறிந்திடா வேட்டி கொண்டான்;
முழுக்கைச் சட்டை மாட்டி
மூக்குமேல் ஆடி மாட்டி
வழுக்கை இல்லையென்றே
விளக்கநேர் வகிடு கொண்டான்!

நெய்யுந்நற் கவிதை யாடை
நித்தமும் போர்த்திக் கொண்டு
வையந் தலைவ ணங்க
வாழுமெம் தமிழன் னைக்கு
ஐயைந் தாண்டு காலம்
அம்மாவோ! முல்லை யாலே
செய்யரநற் சாந்தொடுத்துச்
சேர்க்கின்றான் திருவடிக்கே!

தொண்டைதான் கிழியுமாறு
  தெருவெலாம் மேடை போட்டுப்
பண்டைநாள் தமிழைப் பற்றிப்
  பேசுவோர் ஆயிரம்பேர்;
சண்டைதான் மிச்சமாகும்;
  தமக்குளே மோதி மோதி
மண்டைதான் சாய்ந்து போனார்;
  மற்றுநாம் கண்டதென்ன?

பொன்னடி ஒருவன் மட்டும்
  பூந்தமிழ்த் தொண்டு செய்ய
முன்னடி எடுத்து வைத்தான்
  முயற்சியில் தளர்வி லாதான்;
மின்னிடி எதற்கு மஞ்சான்;
  மெய்த்தவம் ஆற்று கின்றான்!
பொன்னடி நாளும் வாழப்
  பரமனை இறைஞ்சி னேனே!

*–வாலி*

இப்படிக் கவிஞர் பொன்னடியான் அவர்கள்மீதும் அவர் கவிதை இலக்கியத் தொண்டுகள் மீதும் அளவிலாத அன்பும் பற்றும் வைத்திருப்பவர் கவிமேதை வாலி அவர்கள். அவர் பாராட்ட வேண்டியவர்களைப் பாராட்ட வேண்டிய நேரத்தில், பாராட்டும் விதத்தில், பக்குவமாகப் பாராட்டத் தெரிந்த பண்பட்ட பாட்டு மேதை என்பது பெருமைப்படத்தக்க ஒன்றாகும்.

# இசைஞானி இளையராஜா அவர்களின் கருத்துரை



கவிஞர் பொன்னடியார் எனக்கு இலக்கண இலக்கியம் கற்பித்தார். பிற்காலத்தில் பாடல்கள் எழுதவும், வெண்பா கவிதைகள் போன்ற பலவற்றை எழுதும் போதும் அவர் முன்பு கூறிய இலக்கண இலக்கியம் சார்ந்த விஷயங்கள் எனக்குப் பெரிதும் உதவியிருக்கின்றன............. ................

தினத்தந்தி

*20/07/2007*

*'வரலாற்றுச் சுவடுகள்'*



# 'இதயம் இசைக்கிறது'

**ஏக்கம் தழுவாத மனிதர்களில்லை!**
**ஏக்கம் தவழாத இதயங்களும் இல்லை!**

ஒவ்வொரு மனிதனுக்கும் ஓர் இதயம் உண்டு என்பதுவும், அந்த ஒவ்வோர் இதயத்திலும் வெவ்வேறு வகையான ஏக்க எழிலோவியங்களே பளிச்சிடும் என்பதுவும் உலகமறிந்த ஒன்று தானே!

ஓர் இதயத்தில் பூத்த ஏக்கத்தையும், அந்த ஏக்கத்திற்கு எதிர்விடையளித்த இன்னோர் இதயத்தின் ஏக்கத்தையும் படம் பிடித்து உங்கள் முன் ஒரு குறுங்காவியமாகப் படைத்துள்ளேன்.

அன்றிரவெல்லாம் சூல்முதிர் மாதர் வயிற்றைப்போல் கனத் திருந்தது என் இதயம். ஒரு காவியக் கருப்பொருளின் சுமையைக் தாங்முடியாமல் தவித்திருந்தது. மறுநாள் மாலை எட்டயபுரம் பாரதி விழாக் கவியரங்கில் கலந்துகொள்ளப் புறப்பட்டுக் கொண்டிருந்த நான், என் கவிதை ஏடான "முல்லைச்சரம்"

துணையாசிரியர் திரு. தமிழ்வளவன் அவர்களிடம் "அடுத்த இதழில் 'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற நெடுங்கவிதை இடம் பெறுகிறது" என அறிவித்துவிடச் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

அறிவித்தபடி அடுத்த இதழும், அறிவித்ததைத் தாங்கி வந்தது. தொடக்கமுதல் முடிவுவரை எதிர்பாராப் பாராட்டுதல்களைப் பெற்றது. பலர், "இது உங்கள் சொந்த வாழ்க்கைக் காவியம்" என்று வேறு உரிமையோடு கிண்டல் செய்யவும் ஆரம்பித்துவிட்டனர்!

'ஓடுகின்ற ஓட்டத்திலே' என்பார்களே, அப்படிப்பட்ட ஓட்டத்தில் எழுதியதுதான் இக் குறுங்காவியம். வழக்கம்போல் வில்லன்கள் இல்லாமல், துயர முடிவைப் பெறாமல் முடிந்த இந்நூலின்படி, இனிமேல் முளைவிட்டுத் தழைக்கப் போகின்ற இளைஞர்களாவது தங்கள் வாழ்வில் காதல் மணத்தை, கலப்பு மணத்தை மேற்கொண்டு சீர்திருத்த முற்போக்கு வழியில் செல்லவேண்டும் என்பதே என் பேரவா!

இனி நான் எத்தனை பேரிலக்கியங்கள் படைத்தாலும் அவைகளெல்லாம் இக் குறுங்காவியத்திற்கு இணையாகா என்பதே என் கணிப்பு. முழுமையான கவிதைக் கோப்பு இதில் இருக்கிறது என்பதை நூல் வெளிவரா முன்பே கிடைத்த பராட்டுகளே சான்று பகர்வனவாகும்.

என் முதல் நூல் "பனிமலர்" (1964) உங்கள் மேலான அரவணைப்பைப் பெற்றது போலவே இந்நூலும் பெறும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. என் போன்றோரின் முயற்சிகளுக்குக் காப்பளிப்பது உங்கள் கடமை! அது வெளிவர வாய்ப்பில்லாமல் முடங்கிக் கிடக்கும் வெளிவரத் தகுதிபடைத்த என் படைப்புகள் உங்களின் கரங்களில் இனித் தவழ வழிவகுக்கலாம்!

நூலுக்குப் பண்புரையும், சிறப்புரையும் வழங்கிய என் மதிப்பிற்குரியவர்களாகிய பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் அவர்கட்கும், பேரெழுத்தாளர் அகிலன் அவர்கட்கும் நெஞ்சுகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன்.

*முதல் பதிப்பு (1969) முன்னுரை*

'முல்லைச்சரம்'
100, வேளாளர் தெரு,
சென்னை – 7
05 - 02 - 69

உங்கள்,
**பொன்னடியான்**



## பன்மொழிப்புலவர்

# கா. அப்பாத்துரையார் அவர்களின்

## பண்புரை

கவியுலகில் புரட்சிச் சிங்க ஏறான பாரதிதாசன் குகையிலிருந்து வெளிவரும் ஒரு கவிதையங்குருளை பொன்னடியான். அவரது 'ஓர் இதயத்தின் ஏக்கம்' அவர் பொற்காவியங்களின் மரபுக்கு ஒரு புதுப் பூந்தளியமைந்த புதுப் புரட்சிக் காவியம்.

"தமிழரெலாம் ஓரினத்தார் என்ற செய்தி
தழுவட்டும் தமிழ்நெஞ்சை..................."

என்று தமிழுணர்ச்சி திருப்பள்ளியெழுச்சியாக,

"கலப்புமணம் பரவட்டும் இந்த நாட்டில்!
காதல்மணம் பெருகட்டும் இந்த நாட்டில்!"

எனத் தமிழ்ப் பண்புப் புரட்சி முரசு கொட்டுகிறார் கவிஞர்.

தமிழ்ச் சமுதாயத்தின் தற்கால நிலை கண்டு அவர் புரட்சி உள்ளத்தில் சோகமும், அச் சோகத்தில் புரட்சித் தாகமும் அலையெழுகின்றன. அது அடங்கிய சிற்றமாய்ப் பாய்கிறது.

"நோய்நொடியில் இயங்குகின்ற உலகம், இந்த
நுரைஉலகம்; அணுத்திரட்சிக் கொள்கைக் குள்ளே
பாய்விரித்துப் படுத்துறங்கும் உலகம், இந்தப்
பழியுலகம் ........................................................ எட்டிக்
காய்உலகம்! சாவென்னும் காமு கன்கைக்
கைப்பாவை யாய்ஆடும் கலகக் கூடம்!"

'தமிழ்நாடு தமிழருக்கே; உழுபயன் உழுதார்க்கே' என்ற தேசிய, சமதருமக் குரல்களைப் புரட்சிக்கவிஞர் குரலாகக் கேட்டிருக்கிறோம். கவிஞர் பொன்னடியான் இளமையின் கவிஞராக, காதலரின் கவிஞராக நின்று காதல் உரிமை காதலருக்கே என்ற புதுப்புரட்சிக்குரல் எழுப்புகிறார்.

"அப்பனுக்கும் அன்னைக்கும் வயது வந்த
ஆளான தம்மக்கள் திருமணத்தில்
தப்பாகத் தலையிடற்கோ உரிமை யில்லை!
தத்தமது விருப்பம்போல் துணையைத் தேடி
எப்போதும் இல்லறத்தை அவர்நடத்த
இங்கினிமேல் பிள்ளைகட்கே உரிமைவேண்டும்!"

காவியக் கதையின் போக்கிலேயே, இந்த உரிமை வந்த புத்துலகக் கனவை அவர் தம் வாசகர்களுக்கு நனவாகக் காட்டி விடுகிறார். அத்தை மகனாக, மணமேடைக்கு வந்த மணமகன் முத்து, புதுமைக்கவிஞர் சீடனாகி, தன் மணவிழா முறிவைத் தானே வரவேற்று, காதலனுக்குத் தூதாகிவிடுகிறான். மணமகள் தந்தையுந் தாயும் வழக்கமான கவிதை மரபுக்கு மாறாக மகளின் காதலை ஆர்வமாக ஏற்றுப் புதுநடை போடுகிறார்கள்.

மணவிழாவின் கோலாகலம் கூறவந்த கவிஞர், எந்தெந்த ஊரிலிருந்து உறவினர், நண்பர் வந்திருந்தனர் என்று ஊர்ப் பெயர்களை அடுக்குகிறார். சுரங்களடுக்கி இசையின் பண்ணெழுப்பும் பாடகர்போல, ஊர்ப்பெயர்கள் மூலமே இசைப் பண்ணெழுப்பு கிறார் கவிஞர்.

"சாயர்புரம், குமாரபுரம், கண்ண நல்லூர்,
சாத்தான்குளம், குமாரகிரி, ஆராம் பண்ணை
தூயபண்பு நாசரத்தூர், நாணல் காடு
துவளாத நான்குனேரி, மீள விட்டான்
தேயாத புகழுடைய பழைய காயல்

திறன்மிகுந்த பழங்கோட்டை போன்ற ஊரார்
வாயாடிக் கிடந்தார்கள்..................''

ஊர்ப்பெயர்கள் நரம்பாகச் செழுந்தமிழ் நெல்லை மாவட்டமே யாழ் ஆகிவிடுகிறது.

"பாதிஉயிர் என்னுடலில் உன்னு யிர்தான்!"
"கரைஒதுங்கித் தவிக்கின்ற கப்ப லானேன்!"
"கரையுடைத்துக் கட்டுக்கு மீறிப் பாயும்
காட்டாற்று வெள்ளம்போல்......!"

ஆகிய அடிகள் கவிஞரின் உவமை உருவக அணி நலனுக்குச் சான்று தருவன. இத்தகைய மின்வெட்டு நயங்களை அவர் கவிதைகளில் தேட வேண்டியதில்லை; அவை பாடல்தோறும் அடிதோறும் முத்துமணிக் குப்பையாக, மலர்க் கூளங்களாகக் கொட்டிக் கிடக்கின்றன. இத்தனைக்கும் மேலாக, ஓடிய காதல் மகளைத் தேடிவரும் தந்தை மனத்தை வருணிக்கும் இடத்தில்

"............ மகள் முகத்தைக்
கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்
கருணைமனத் திற்குஉவமை தேடு கின்றேன்!"

என அவர் உவமை மறுப்பணியையும் கையாள்கின்றார்.

'தயிர்போல் மேனி', 'கற்புத் தேவி', 'குடும்பக் காட்சி', 'திகைப்பூண்டு செடி மிதித்தாற்போல்' தொடர்களில் 'அணிப்புதுமை', 'சொற்புதுமை', 'சந்தப் புதுமை', ஆகியவை சதிராடுகின்றன.

"கரிகாலன் கல்லணையின் சிலையைப் போலே
காத்திருப்பேன்"

"மாணிக்க வாசகர்தம்
இனியதிரு வாசகத்தில் உருகி னாற்போல்"

என்ற உவமைகள் தமிழர் வாழ்வுக் கடலாழத்திலிருந்து புடைத்தெடுத்த பழுத்த முத்துப் பவளங்களாய்த் திகழ்கின்றன.

புதுமைக்கவிஞர், தற்கால இயல்நூலில் தற்கால நாகரிக வாழ்வில் கொண்ட ஈடுபாடு பெரிது. காதலன், காதலியின் இன்றியமையாமையை வலியுறுத்தும் இடத்தில் -

'கரையின்றி ஆறில்லை'
'புவிஈர்ப்பின் ஆற்றலின்றி உலகமில்லை'

என்று கழறவைக்கிறார்.

"ரப்பர்" போன்ற புத்துலகப் பொருள்களின் அயல்மொழிப் பெயர்களையோ, 'தண்ணி', 'தப்புத்தண்டா' போன்ற வழக்குச் சொல் வடிவங்களையோ பயன்படுத்துவதற்குக் கவிஞர் தயங்கவில்லை. இதன் பயனாக, மருத்துவத்துறை அறிவுலக அயற் சொற்களான 'மிஜிமைடு', 'பெமிகிரைடு' ஆகியவற்றையும் அவர் கவிதையஞ் செல்வி அனாயாசமாகக் கையாள்கிறாள்!

இது மட்டுமா?
"செம்மையிலா நோய்மனிதர் நிறைந்தி ருக்கும்
ஸ்டேன்லிமருத் துவமனையில் அங்கு மிங்கும்
கும்மியடிக்கும் மங்கை சுழல்தல் போன்று
குறுக்கும் நெடுக்கும் ஓடி......."

என்ற அழகிய வருணனையில் ஸ்டேன்லி மருத்துவ மனை என்னும் அயல்மொழிப் பெயராலேயே தமிழ் இலக்கணம் இனி காண வேண்டி ஒரு மாய மோனையையும் நமக்கு வகுத்துக் காட்டி விடுகிறார்.

*அளவிற் சிறியதாயினும் இக்காவியத்தின் எட்டுப் பிரிவுகளும் எட்டுக் காண்டங்கள்போல் அழகுற யாத்தமைக்கப்பட்டுள்ளன. பதிற்றுப்பத்தின் கவிஞர் கையாண்டுள்ள முறையைப் பின்பற்றி, பிரிவு தோறும் உணர்ச்சி கொட்டும் அடிகளை அணில்போல் கவிஞரே கொய்தெடுத்துத் தலைப்பாக்கியுள்ளார். கதைப்பகுதியை நாடக நயம்படக் கட்டமைப்பதில் நான்காம் ஐந்தாம் பகுதிகள் கதை யாப்பமைதித் திறம் காட்டுகின்றன. இரண்டிலும் ஒரே சமயத்தில் நடைபெறும் காதலன் - காதலி செய்திகள், காதலர் திற, - பெற்றோர் திறச் செய்திகள், ஒன்றுடன் ஒன்று மாறுமெனப் பின்னப்பட்டு புத்தொருமை காட்டுகின்றன.*

*கடைசியாகக் 'கவிஞரின் தலைசிறந்த வெற்றிக்கூறு' ஓரளவு பண்டைய சங்க இலக்கியத்துக்கும், பேரளவு உருசிய இலக்கியத் துக்கும் மட்டுமே இருப்பதாகக் கூறப்படும் எழுதிறனாகும். பெரும்*

*புரட்சிக் கவிஞர்கள்கூட, பேச்சுத் தமிழின் சொற்களை மிகுதியாகச் சேர்த்துத்தான் எளிய நடை பயின்றுள்ளனர். அவ்வாறு செய்யுளி டத்திலும் அவர்கள் எளியநடை வெற்றி பெறும்போது, கவிதை தளர்ந்துவிடுவதும் கவிதை வெற்றி பேறும்போது, எளிய நடை தளர்ந்துவிடுவதும் திறனாய்வாளர் அறியாததன்று. ஆனால், கவிஞர் பொன்னடியான் கிட்டத்தட்ட பேச்சு நடையை அப்படியே பின்பற்றிக், கவிதையிலும் வெற்றி கண்டுள்ளார்.*

இவர் வெற்றியின் இரு முகடுகளை இருவகைச் சான்று களாகக் காட்டலாம்.

> **"தப்பறியாச் சிறுமலராய்ப் பாவா டைக்குள்**
> **தமிழ்பேசி நீதிரிந்து வளர்ந்த போதோ**
>
> **"இப்போதே நகைபோட வேண்டும், அப்பா!**
> **என்காதில் துளைபோடு" என்று அடம் பிடித்தாய்'**

இதில் தந்தை தந்தையாக, குழந்தை குழந்தையாகவே பேசும் பேச்சே படம் பிடிக்கப்பட்டு, அப்படியே கவிதையாய்த் திகழ்கிறது. ஆனால், 'மலர்', 'தமிழ்' என்ற மாயச் சொற்கள்தாம் பேச்சைக் கவிதை யாக்கிவிட்டன என்று திறனாய்வாளர் கூறக் கூடும். ஆனால், அடுத்த பகுதி சங்க இலக்கியம்போல், பேச்சு நடையிலிருந்தே கவிதையின் இசைச்சந்தத்தை வெட்டியெடுத்துக் காட்டுவது காணலாம்.

> **"எவன்தயவை நம்பிநாம் வாழு கின்றோம்;**
> **எவன்உழைப்பால்நான் உயர்ந்தேன்! அன்றும் இன்றும்**
> **எவன் நிழலி லும்தங்க நினைத்த துண்டோ?**
> **எவன் சொத்திற் கும்ஆசைப் பட்டதுண்டோ?**

தமிழரல்லாத எவராவது தமிழ் படித்து இதை வாசித்தால், தமிழரெல்லாம் கவிதையாகத்தான் பேசுவார்கள் போலும் என்று நினைத்துவிடக் கூடும்!

புதுமையினுள் நுழைந்து நடைபோடும் கவிஞர் பொன் னடியான் கவிதை வரவேற்கத் தகுந்தது; போற்றி வளர்க்கத் தகுந்தது. வாரிக் கொட்டுகின்ற அவர் சொற்கட்டுகளும் அணிகளும் அதிவீரராம பாண்டியனின் நைடதத்தைப்போல் உடலையே

மறைத்துவிடும் அணியாய்விடக்கூடாது. அதே சமயம் அரும்பாடு பட்டு அவர் கவிதையஞ்செல்வி மேற்கொள்ளும் எளிமையை, இக்காலப் புதுமை ஆடையைப் போல, உண்மை எளிமையாக, ஆடையில்லாத நிலையாக எவரும் நினைத்துவிடக்கூடாது.

பாரதி, பாரதிதாசன் வழியிலே சிறப்பெய்தும் கவிஞரிடம், கவிமணி தேசிக விநாயகம், கம்பன் ஆகியவர் வழியின் கலைக்கூட்டு இலைமறை காயாய் உடன் திகழ்கிறது. இரண்டும் கூடிவளர்ந்து வருங்காலத் தமிழ்க் கவிதைப் பொங்கல் ஆக்குமாக!

சென்னை
10 - 8 - 68

அன்பன்,
**கா. அப்பாத்துரை**



## பேரெழுத்தாளர்

# அகிலன் அவர்களின்

# அணிந்துரை

கவி பாடுபவர், காதல் உணர்ச்சி வயப்பட்டவர், பைத்தியக் காரர் - இந்த மூவரும் ஒரே வகையைச் சேர்ந்தவரே என்று யாரோ குறிப்பிட்டிருக்கிறார்கள். அதிலும், இளங்கவிஞர் ஒருவருக்குக் காதல் பைத்தியம் பிடித்துவிட்டால் கேட்கவா வேண்டும்? இப்படித்தான் ஷெல்லி என்ற ஆங்கிலக் கவிஞனுக்கும் ஒரு சமயம் காதல் பைத்தியம் பிடித்துவிட்டது. பலன்? - ஆங்கில இலக்கியத் துக்கு அமரத்தன்மை பெற்ற சில ஒப்பற்ற சிரஞ்சீவிக் கவிதைகள் கிடைத்தன.

ஷெல்லியின் கவித்திறனுக்கு ஓர் எடுத்துக் காட்டுக் கூற வேண்டுமானால், பாரதியாரே தமது தொடக்க காலக் கவிதைகள் சிலவற்றை 'ஷெல்லி தாசன்' என்ற புனைபெயரில் எழுதியுள்ளார் என்பதை நினைவுபடுத்திக் கொண்டால் போதும்.

காதல் உணர்ச்சி எல்லோரையுந்தான் ஏதோ ஒரு பருவத்தில் பற்றிக்கொள்ளுகிறது. ஆனால், அது கற்பனையாற்றலும் சொல்

லாட்சியும் அழகுணர்ச்சியும் மிக்க கவிஞரையோ எழுத்தாளரையோ பாதிக்கும்போதுதான் அதனால் மொழிக்கும் இலக்கியத்துக்கும் யோகம் பிறக்கிறது.

'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற இந்தச் சிறு கவிமாலையை நுகர்ந்தபோது எனக்கு ஏற்பட்ட எண்ணங்களையே நான் மேலே குறிப்பிட்டிருக்கிறேன். கவிஞர் பொன்னடியான் அவர்களுடைய இதயத்தையும் அதன் ஏக்கத்தையும் மட்டுமல்ல, அந்த இதயத்தி லிருந்து பொங்கிப் பொழியும் ஆவேசக் கவிப்பெருக்கின் உணர்ச்சி அழகையும் என்னால் உணரமுடிகிறது. 'உள்ளத்தில் ஒளி உண்டா யின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' என்பது கவிஞர் பாரதியின் வாக்கு. அந்த ஒளி எவ்வகையான நல்ல உணர்ச்சிகளிலிருந்தும் பிறக்கலாம்; காதல் உணர்ச்சியும் உள்ளத்துக்கு ஒளிதரக் கூடிய ஒரு நல்ல உணர்ச்சிதான். சங்க காலத்துக் கவிஞர்க்குக் காதலும் வீரமும் உள்ளத்தில் ஒளி தந்துள்ளன; இடைக்காலத்துக் கவிஞர்க்குப் பக்தி உணர்ச்சி அதைத் தந்துள்ளது; பாரதியாருக்கும், பாரதிதாசனுக்கும் நாட்டுப் பற்றும் சமுதாயப் பற்றும் ஒளி தந்துள்ளன.

கவிஞர் பொன்னடியானின் இந்தச் சிறு காப்பியத்திலிருந்து பல அடிகளை இங்கே எடுத்துக் காட்டலாம், உணர்ச்சிக்கும், உவமைக்கும், அழகுக்கும். ஆனால் ஒன்றிரண்டையேனும் சுட்டிக் காட்டுகிறேன்.

உவமைக்கு ஒன்று, -

**"உன்தோழிக் குழுவுடனே நீயும் அங்கே**
**ஒளிவெள்ள மாய்த்தோன்றிக் காட்சி தந்தாய்!"**

மலர் என்றோ, கொடி என்றோ, மான் என்றோ, கிளி என்றோ, குயில் என்றோ பலர் சொல்ல நாம் கேட்டிருக்கிறோம். 'ஒளி வெள்ளமாய்த் தோன்றித் தலைவி காட்சியளித்தாள்' என்பது அற்புதக் கற்பனையல்லவா?

உணர்ச்சிக்கு இதோ, -

***"சரிதானா சரிதானா சரியே தானா?.......***
***தவிக்கின்றேன்! தவிக்கின்றேன்! தவிக்கின் றேனே!".........***

உணர்ச்சிக்கும் அழகுக்குமாகச் சேர்த்து,-

" ஓவியப்பூ நீஎன்றன் குடங்கைக் குள்ளே
ஒட்டிவிட்டால் உலகின்முதற் கவிஞ னாவேன்!
தேவி – என் தேவி – ஓ தேவி! உன்றன்
தேன்மனத்தை எனக்குரிமை ஆக்கல் என்றோ?"

காரிகை படித்துக் கவிதை எழுதுவோர் சிலர்; அகராதியைப் புரட்டிப் பார்த்துச் சொற்களை எடுத்து நிரப்புவோர் சிலர்; இலக்கண வரம்புக்குட்பட்ட சொற்கட்டடங்களை இவர்கள் எப்படியோ எழுப்பிவிடலாம். இலக்கியம் என்பது உயிர்ப்படைப்பு. அதைப் படைத்தவனுக்குப் பின்னாலும் உயிர் வாழக்கூடிய ஆற்றல் அதற்கு உண்டு. இலக்கண வரம்பும் வேண்டும்; இலக்கியச் சிறப்பும் வேண்டும்.

இந்தச் சிறு நூலைப் படித்த எனக்கு, உருவாகி வரும் ஒரு எதிர்காலப் பெருங்கவிமகனின் அழகான கன்னி முயற்சி இது என்று தோன்றுகிறது. பெருங்காப்பியங்களை, வெவ்வேறு சந்த அமைப்புள்ள அடிகளில், பல்வகைப் பாத்திரங்களோடும், உயர்ந்த கருப் பொருளோடும் படைக்கக்கூடிய ஆற்றலின் வித்துக்கள் இவரிடம் உள்ளன. பொன்னடியானின் வளர்ச்சி இன்றையத் தமிழ்க்கவிதை இலக்கியத்தின் புது மலர்ச்சியாகத் திகழ என் வாழ்த்துகள்.

சென்னை – 14
19 - 8 - 68

அன்புள்ள,
**அகிலன்**



—கவிஞர் பொன்னடியாரின்

# 'ஓர் இதயத்தின் ஏக்கம்' —ஓர் ஆய்வு

**பேராசிரியர் முனைவர் வான்முகில்**

**முன்னுரை:** ஒரு சாதாரண மனிதனின் ஏக்கம் நிறைவேறும் போது அவனது சுயநலமே பயன்பெறும். ஆனால் ஒரு கவிஞனின் ஏக்கம் நிறைவேறும்போது அங்குச் சமுதாய நலன் மலரும். கவிஞர் பொன்னடியானின் இதய ஏக்கமான இக் குறுங்காவியம், இளைய சமுதாயம் வாழ வழிகாட்டும் ஒரு கைகாட்டி

**காவியக் கதை:** இஃது ஒரு குறுங்காவியமானதால், காவியக்கதை ஒரு குறுநாவலாகவே அமைந்துள்ளது. காதல் கதைதான். ஆனால் வில்லன் இல்லாத காதல் கதை. மக்கள் கவிஞன் பண்ணரசன் பொன்மலரைக் காதலிக்கின்றான். அவள் வேற்றூருக்கு மாற்றலாகிப் போகின்றாள். பிரிவுத் துயரில் வாடும் காதலனின் கவிதைமடலே நூலின் தொடக்கம். காதலர்கள் தங்கள் காதலை

வெளிக்காட்டாமல் அடக்கமாக நடந்துகொள்கின்றனர். எனவே, முறை மாப்பிள்ளை முத்துவுக்கு பொன்மலரை மணமுடிக்க, அவளது பெற்றோர் முனைகின்றனர். பொன்மலர் கவிஞருக்கு எழுதும் இறுதி மடலே நூலின் இரண்டாம் பாகம். அதனைப் படித்து மனமுடைந்து கவிஞன், தற்கொலை செய்துகொள்ள முனைகிறான். இதனையறிந்த பொன்மலர் காதலனை மருத்தவ மனையில் சந்திக்கின்றாள். மகளின் மனமறிந்த பெற்றோர், அவள் விருப்பப்படியே மணமுடிக்கின்றனர்.

பொதுவாகக் காதல் தோல்வியைப் படித்துப் பழக்கப்பட்ட நமக்குக் காதலின் வெற்றியையும், கலப்பு மணத்தின் வெற்றியையும் பாடும் இக்குறுங்காவியம், இலக்கிய வானில் தோன்றிய ஒரு விடிவெள்ளியாகவே தெரிகின்றது.

**பாத்திரப் படைப்பு:** இந்நூலில் காணப்படும் பாத்திரங்கள் பண்ணரசன், பொன்மலர், பொன்மலரின் பெற்றோர், முறைமாப்பிள்ளை முத்து எனச் சிலரே. பொன்மலரின் பாத்திரப் படைப்பே மேலோங்கி நிற்கிறது. வழக்கமாகப் பெண்களை அங்கம் அங்கமாக வருணிக்கும் மரபு முறையை இந்நூலாசிரியர் ஒதுக்கித் தள்ளிவிட்டு ஓரிரு கோடுகளில் உருவத்தைப் புலனாக்கும் ஓவிய முறையைக் கையாளுகின்றார்.

**" கண்ணாலே சிரிப்பாயே! முகத்தைப் பொத்திக்**
**கை விரலின் இடுக்காலே எனைப் பார்ப்பாயே"**

என்ற பண்ணரசனின் மடலை நாம் படிக்கும் பொழுது பொன்மலர் கை விரலின் இடுக்காலே நம்மையும் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. "எனக்கும், முறை மாப்பிள்ளை முத்துவுக்கும் திருமணம் நடத்தப் பெற்றோர் ஏற்பாடு செய்து விட்டனர். என்னை மறந்து விடுங்கள். எனக்குப் பிறக்கும் மகனுக்கு உங்கள் பெயர் வைப்பேன். நீங்கள் வேறொருத்தியை மணந்து கொள்ளுங்கள்" என்று இறுதி மடல் எழுதுகின்றாள் பொன்மலர். இது வழக்க மாகத் தமிழ்த் திரைப்படங்களிலும் தமிழ்க் கதைகளிலும் வரும்

கதைப்போக்கு. இதன் பாதிப்புக்கு ஆளானவளாகவே பொன்மலர் முதலில் தோன்றுகின்றாள்.

" சிறைப் பறவையான தமிழ் பெண்ணினத்தார்
சீறுகின்ற புலியாகும் வரைக்கும் இங்கே
திரைமறைவு நாடகங்கள் மணச் சடங்கில்
தினம் நடக்கும், மூடாக்குப் போக்கே பூக்கும்"

என்று அவள் தன் மடலில் எழுதுகின்றாள். தன் காதலன் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்ட செய்தியறிந்ததும், சிறைப்பறவையாயிருந்த பொன்மலர் சீறும் புலியாகின்றாள். மணவீட்டில் பெற்றோரின் காவலை மீறி, வெளியேறிச் சென்னைப் பயணமாகிறாள். உண்மைக் காதலை யார்தான் தடுக்க இயலும்? அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்? அவள் சென்னை நோக்கிப் புகைவண்டியில் பயணம் செய்யும் பொழுது, ஆணுடை தரித்து வருவதாகக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கவிஞன் பண்ணரசனின் பாத்திரப் படைப்பு பற்றி ஓரிரு குறிப்புகளே கிடைக்கின்றன.

"சித்தன் - என் துறவுணர்வைக் கலைத்து விட்டாய்"

என்று, பொன்மலருக்கு மடல் எழுதுகிறான் கவிஞன். இச்சித்தனின் சித்தமெல்லாம் நாடும் மக்களும் நலமடைய வேண்டுமென்ற பொது நோக்கில் அமைந்தது.

" தமிழரெல்லாம் ஓரினத்தார் என்ற செய்தி
தழுவட்டும் தமிழ் நெஞ்சை; இனிமேல் பூக்கும்
தமிழரெல்லாம் ஒரு தாயின் பிள்ளை யாகத்
தவழட்டும் தமிழ் நிலத்தில்; வருங் காலத்தில்
தமிழரெல்லாம் உலகோடு தோள் பிணைத்துத்
தலை நிமிர்ந்து நடக்கட்டும் புகழ்ப் பூரிப்பில்"

என்று கவிஞன் கூறுகின்றான. இத்தகு கொள்கைப் பிடிப்பில் இருக்கும் கவிஞனின் மனத்தில் ஏக்கம் பிறந்தது எப்படி?

" அன்பென்னும் பெரும்பிடிக்குள் பிறந்த ஏக்கம்",

என்று கவிஞனே விளக்குகின்றான். காதலில் தோல்வியுற்றவர் தற்கொலை செய்துகொள்வது கோழைத்தனம்தான். ஆனால்,

உணர்வுகள் மேலோங்கி நிற்கையில் அறிவின் வழி நிற்கும் எண்ணங்கள் மங்கிவிடுவது இயற்கையே!

“ ஏக்கத்தில் கருகலிலும் இறத்தல் நன்றே”
“ காய் பழுத்துக் கனியாகும் நேரம் சின்னக்
கல்லடியால் தரைவீழ்தல் போல் போகின்றேன்”

என்று கவிஞன் கூறும் காரணங்கள் உணர்வின் மேலாதிக்கத்தால் தோன்றியவை என்று விளங்குகின்றது. இவ்வாறு உணர்ச்சியின் வடிவாகவே இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

பிற படைப்புகள் சிறு பாத்திரங்களே. பொன்மலரின் தந்தை, மணவீட்டில் தன் மகளைக் காணாமல் அழும்போது அவள் சிறுவயதில் காதில் துளைபோட்டுக் கொண்டு, நகை போட்டுக் கொள்ள அடம் பிடித்த கதையைச் சொல்லித் தேம்புகின்றார். இது தந்தைப் பாசத்தின் தன்மையைக் காட்டுகிறது. பொன்மலரின் தாய், முதியதலைமுறைத் தாய்மார்களின் இயல்புக்கேற்பப், படைக்கப் பட்ட பாத்திரம். எங்கோ ஒருமுறை தலைகாட்டி, ஏதோ ஒருசில சொற்களையே பேசுகின்றாள். குடிப் பெருமையைக் காக்க வேண்டும் என்பது அந்த இதயத்தின் ஏக்கம். முதிய தாயின் இயல்பான சொற்களாலேயே கவிதை அமைந்துள்ளது காண்க.

“ என்னங்க மாப்பிள்ளை தந்தை தாயே
இதை மறுத்தால் என் செய்ய? நம்மைச் சுற்றித்
தின்பதற்கும் முழுமொட்டை அடிப்பதற்கும்
திரண்டுள்ள உறவினரோ, உதட்டைத் தூக்கிக்
கண்ணாலே ஏளனங்கள் பேசுவாரே!
கதைகதையாய் ஊரெங்கும் பரப்புவாரே!
இன்னுயிரைத் தாக்கும் இச்செயலுக்கெல்லாம்
என் செய்வோம்?”

என்று தாய் ஏங்குகிறாள். அந்த நல்லிதயத்தின் ஏக்கத்தை நீக்கத் தந்தை கூறும் பதில் சிந்திக்கத் தக்கது.

“ எவன் தயவை நம்பிநாம் வாழுகின்றோம்
என்னுழைப்பால் நானுயர்ந்தேன்...
எவன் வந்தால் என்ன? போனால்தான் என்ன
என் செல்வி வாழ்விற்கே வாழ்வேன்”

என்று சூளுரைக்கின்றார். நேர்மையாக வாழ்ந்த ஒரு தந்தையின் வீரம் இங்குப் பேசுகின்றது.

முறை மாப்பிள்ளை முத்து, பண்ணரசனின் சுவைஞனாகப் படைக்கப்பட்டுள்ளான்.

காதலரின் எதிர்க் கட்சியில் இருக்கவேண்டிய பெற்றோரும், முறைமாப்பிள்ளையும், கட்சி மாறி விடுகின்றனர். சாதி, மதம், பணம், நிலை முதலானவை காதலர் மணம் முடிக்கத் தடையாய் இருப்பதாகத் தெரியவில்லை. 'பெற்றோரிடம் உரிய நாளில் சொல்லவில்லை என்பதே காதலுக்கான தடையாகத் தெரிகிறது. கதையின் சிக்கலுக்கு இது வலுவான காரணமாகத் தெரியவில்லை. இத்தடையை மீற முயலாமல் பண்ணரசன் தற்கொலை செய்ய முயல்கின்றான். ஆனால், தடையை மீறி, வீட்டை விட்டு வெளியேறி வரும் பொன்மலர், புதுமைப் பெண்ணாகக் காட்சி தருகிறாள்.

இக்கதையில் வரும் எல்லாருக்கும் இதயம் இருக்கிறது ஏக்கமும் இருக்கிறது. "ஓர் இதயத்தின் ஏக்கம்? யார் இதயத்தின் ஏக்கம்?" தூக்க, மாத்திரையில் ஏக்கத்தை முடித்துக்கொள்ளும் பண்ணரசனின் ஏக்கத்தைவிட, அவனைக் காப்பாற்றி, மண முடித்துக் கொண்டு வெற்றி பெறும் பொன்மலரின் இதய ஏக்கமே நூலின் தலைப்பாகியுள்ளது என்பதே என் கருத்து. செயல் திறனுடைய இதயத்தின் ஏக்கத்தால்தான் நாடு பயன்பெறும்.

**கவிநயம்:** குறுங்காவியத்தின் கதை சிறிதெனினும் கவிநயம் பெரிதே. காவிய வானில் உவமை விண்மீன்கள் மின்னி மினுக்கு கின்றன. இந்த உவமைகள் வலிந்து புனையப் பட்டவை அல்ல. எளியவை இயல்பானவை; அன்றாட வாழ்வில் காணக் கூடியவை இவற்றைத் தொகுத்து ஆய்ந்தால் தனி நூலே எழுதலாம். எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டு மட்டும் இங்குக் காணலாம்.

காதலன் - காதலி பிரிவை விளக்க,

" தாயை விட்டே
ஊர் பிரிந்த சிறு பள்ளி மாணவன்போல்"

என்ற பாசமிக்க உவமை கையாளப்பட்டுள்ளது. பிரிவால் வாடும் காதலினின் நிலை.

**" பொரி உருண்டை போலே நான் தக்கையானேன்"**

என்ற அருமையான உவமையின் மூலம் புலப்படுகின்றது. பொரி உண்டை கனமாகவும், பெரியதாகவும் தோன்றினாலும், கையிலெடுத்துப் பார்த்தால் தக்கையாக இருப்பதை உணரலாம். அது போலப் பிரிவால் வாடும் கவிஞன் வெளித் தோற்றத்திற்குப் பெரியவனாக, உடல் வலுவுள்ளவனாகத் தோன்றினாலும், உள் வலுவின்றித் தக்கையாக இருக்கின்றான் என்பதற்கு இதைவிட வேறு பொருத்தமான உவமையினை எவரும் கூற இயலாது.

**" கரிகாலன் கல்லணையின் சிலையைப்போலே**
**காத்திருப்பேன்"**

என்று ஓர் உவமை. இப்படிப் பல புதிய, அரிய உவமைகளைக் கவிஞர் கையாண்டாலும், ஓரிடத்தில் உவமை காட்ட முடியாமல்,

**" ..... மகள் முகத்தைக்**
**கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்**
**கருண்ண மனத்துக் குவமை தேடுகின்றேன்"**

என்கின்றார். இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் இந்த அடிகளை ஆராய்ந்து "இது உவமை மறுப்பணி" என்று கூறியுள்ளார்.

இது ஒரு கவிஞனின் காதல் காவியம்தான். என்றாலும், தன் வீடு பெண்டு, பிள்ளை என்ற குறுகிய வட்டத்தில் சுழலவில்லை. தமிழ் ஒளி, கீட்சு முதலானோரின் வாழ்க்கைக் குறிப்புகள் இதில் உள்ளன. தன்காவியத்தில் சம காலத்திய கவிஞர்களின் பெயர்களைக் குறிக்கும் பரந்த மனப்பான்மை ஒரு சிலருக்கே வரும்.

**" தலை வணங்காப் புகழ்க் கவிஞன் ஏழைத் தோழன்**
**தமிழ் ஒளியும் இப்படித்தான், ஒருத்தியின் மேல்**
**தணியாத அன்பு வைத்தான்; காதலித்தான்"**

என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார். ஆங்கிலக் கவிஞர் வில்லியம் வேர்ட்ஸ்வொர்த் 'தி ரிசொலேஷன் அண்டு இன்டி பென்டென்ஸ்'

என்ற கவிதையில் தாமஸ் சாட்டர்டன், ராபர்ட் பான்ஸ் ஆகியோரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சாட்டர்டனும், பான்சும் ஏழ்மையில் வாடி, இளமையில் மறைந்த ஆங்கிலக் கவிஞர்கள் வோர்ட் வொர்த் கவிதைக் குறிப்பின் மூலம் தாம் நாம் அவர்களைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது. அதேபோல் தமிழ் ஒளி என்னும் தமிழ்க் கவிஞன் ஒருவன் இருந்ததே, பொன்னடியான் கவிதைக் குறிப்பின் மூலம் தானே தெரிகிறது.

**கவி நடை:** கவி நடை எளிய இனிய நடை, நாம் அன்றாடம் பயன்படுத்தும் பேச்சு நடை. இங்கு ஓசை நயமிக்க வரிகளாக மாறியிருப்பது கவிஞரின் திறமையைக் காட்டுகின்றது. எதுகை மோனைக்காக வலிந்து ஏதாவது ஒரு சொல்லைப் போட்டதாக எவரும் காட்ட இயலாது. முதல் பகுதியில் கவிதைகளுக்கிடையில்,

“ சரிதானா சரிதானா சரியே தானா?
ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி
உயிர்வாதை படுவதுவும் முறையே தானா?”

என்ற வரிகள் மீண்டும், மீண்டும் பல்லவி போல் பயன்படுத்தியிருப்பது ஒரு புதுமையே. கவி மடலின் மைய உணர்வுப் பிழிவாக இவ்வரிகள் அமைந்துள்ளதால், இவை தனித்து நிற்காமல் பிற கவிதை வரிகளுடன் இணைந்தே ஓசை நயம் கூட்டுகின்றன. நாம் உணர்ச்சி வசப்படும் பொழுதும், தயங்கும் பொழுதும், பேச்சில் தடுமாற்றம் ஏற்படுவது இயற்கையே. இதனைக் கவிதையின் இயல்பாகப் பயன்படுத்தியுள்ளது ஒரு புதுமையே. இதோ பாருங்கள்.

“ கண்ணீரை .... கண்ணீரை ..... என் கண்ணீரைக்
காணிக்கை யாக்குகின்றேன் உங்களுக்கே,”

“ நான் வந்து ... நான் வந்து.... முத்து”

கதை மாந்தரின் பெயர்களைப் பாட்டில் அமைப்பதற்கே திறமை வேண்டும் - ஊர்ப் பெயர்களை அமைப்பதும் அரிதுதான். காகிதத்தின் மேல் உள்ள இரும்புத் தூள்கள் கீழே மறைத் வைக்கப் படும் காந்தமொன்றின் ஈர்ப்பினால் சிலிர்த்து, அணி வகுப்பதைப்

பார்த்திருப்பீர்கள். அது போலக் கவிஞனின் காந்த சக்தியால் ஊர்ப் பெயர்கள் அணிவகுப்பதைப் பாருங்கள்.

" சாயர்புரம், குமார புரம் கண்ண நல்லூர்,
சாத்தான்குளம், குமார கிரி, ஆராம் பண்ணை,
தூய பண்பு நாசரத்தூர், நாணல் காடு
துவளாத நாங்குனேரி, மீளவிட்டான்,
தேயாத புகழுடைய பழைய காயல்
திறன் மிகுந்த பழங் கோட்டை போன்ற ஊரார்
வாயாடிக் கிடந்தார்கள்; விருந்தை உண்ண
வந்திருந்த உறவினரோ அழுதார் ஆங்கே!"

இவ்வாறு கவிநயத்தில் சிறந்து விளங்கும் ஒரு காதல் காவியத்தைப் படிப்பதால் சமுதாயத்துக்கு என்ன பயன்? முன்னரே நான் குறித்துள்ளது போல இது காதலர் இருவரின் சொந்தக் கதை மட்டுமன்று; உலகப் பொது நோக்கில் அமைந்த கருத்துகள் பல கொண்ட பொதுச்சோலையில் மணம் பரப்பும் மலர்களில் சில:

" மனக் கதவு மூடப் பட்டே யிருந்தால்
மனிதனில்லை; உலகத்தின் இயக்கம் இல்லை"

" துரும்பளவும் மற்றோர்க்குத் தீங்கு செய்யாத்
தூய உள்ளம் கொண்டிடுவீர்; உயர்வு கொள்வீர்!!"

காதலர்கள் தங்கள் காதலைப் பற்றிப் பெற்றோரிடம் துணிந்து உரைத்திருந்தால் முதலிலேயே வெற்றி கிடைத்திருக்கும். துணிவே வாழ்வின் வெற்றிக்குத் துணை என்பதைக் கவிஞர் இவ்வாறு உரைக்கின்றார்.

" தோல்வி தன்னைக்
கோழை மனம் கொண்டதனால்
அணைத்துக் கொண்டோம்"
" மோதலுக்கும், சாதலுக்கும் துணிந்திருந்தால்
முழுவெற்றித் தேனாற்றில் கலந்திருப்போம்"

மேலும், முறையான அடக்கமான காதலுக்குப் பெற்றோரின் ஆதரவும் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஒளியை, இந்நூலில் இளையோரின் உள்ளங்களில் ஏற்றி வைத்துள்ளது.

**முடிவுரை:** ஒரு நூலின் வெற்றி அதனைப் படிப்பவர்களின் எண்ணிக்கையில் இல்லை. கவிதை இலக்கியங்களைப் படிப்பவர்களின் எண்ணிக்கை குறைவே. ஆனால் படிப்பவர் மனத்தில் நீங்கா இடம் பெற்றுவிட்டால் அதுவே நல்ல வெற்றியாகும். அந்த வெற்றியை இந்நூல் சிறப்பாகவே பெற்றுவிட்டது. இக்காவியம் 'முல்லைச்சரத்'தில்' தொடராக வெளிவந்த பொழுது, வரிகளை மனப்பாடம் செய்த பலர், இன்றும் அதனைச் சொல்லி வியக்கின்றனர்.

எனவே, இதுபோன்ற குறுங்காவியங்கள் பலவற்றைக் கவிஞர் பொன்னடியான் இயற்றுவாரா? என்பதே என் இதயத்தின் ஏக்கம். பண்ணரசன், பொன்மலரின் மணவாழ்க்கை, இலக்கிய வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு அடுத்தடுத்துத் தொடர்காவியங்கள் எழுதலாமே.

திறனாய்வாளர்களுக்கு ஒரு வேண்டுகோள்: இந்நூல் 1969-ல் முதல் பதிப்பாகவும் வெளிவந்தது. ஆனால் இந்நூல் பற்றி விரிவான திறனாய்வு இதுவரை ஏடுகளில் வந்ததாகத் தெரியவில்லை. நூலாசிரியர் நடத்தும் 'முல்லைச்சரத்'திலும் வெளியாகவில்லை. காரணம் என்ன? 'முல்லைச்சரம்' - கவிஞர் பொன்னடியான் சார்பு ஏடுதான்; ஆனால் அவருக்காக மட்டும் நடத்தப்படவில்லை. இது ஒரு காரணம். ஆனால், வலுவான காரணமில்லை. எனவே, ஒரு நூல் வெளியானவுடன் அதுபற்றிய ஆழ்ந்த திறனாய்வினை உடனே வெளியிட வேண்டுமென்று திறனாய்வாளர்களையும் இலக்கிய ஏடுகளின் ஆசிரியர்களையும் கேட்டுக் கொள்கிறேன். இதன்மூலம் உண்மைக் கவிஞர்கள் ஊக்கமடைவர். போலிகள் மடிவர். நாடும் மொழியும் பலன்பெற்றுச் செழிக்கும்.

அன்பன்,
**வான்முகில்**



—கவிஞர் பொன்னடியாரின்

# 'ஓர் இதயத்தின் ஏக்கம்'

## ஓர் உவமைக் களஞ்சியம்

புலவர் க. முருகானந்தம்

கவிஞர் பொன்னடியார் அவர்களின் 'ஓர் இதயத்தின் ஏக்கம்' 1968ஆம் ஆண்டு 'முல்லைச்சரம்' இதழில் தொடராக வெளிவந்து பிறகு நூலாகிப் புகழ்பெற்ற குறுங்காவியம். படிக்கப் படிக்கக் குறையாத சுவையூற்று; நினைக்க நினைக்க இனிக்கும் இன்பப் பெட்டகம். ஆம்! அந்தத் தொடர்காவியத்தினை நான் முல்லைச்சரத்தின் மூலம் நுகர்ந்தபோது உவமை கூறமுடியாத இன்பம் பெற்றேன். வரிக்குவரி வனப்பு, சொல்லுக்குச் சொல் சுவை, ஏன் எழுத்தெல்லாமே இனிக்கின்றன.

இக்காவியத்துள்,

“நகையே, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி உவகை எனத் தொல்காப்பியர் கூறிய சுவைகள் அனைத்தும் நிறைந்திருக்கின்றன. அவைகளை எல்லாம் விரித்து எழுதப் புகுந்தால் ஒரு நூல் வெளியிடும் அளவுக்கு மேலேயே எழுதலாம். இருப்பினும் மிகச் சுருக்கமாக எழுதவேண்டிய காரணத்தால் இக்காவியத்தில் அமைந்திருக்கும் உவமைச் சுவைகளைச் சிறிது சுட்டிக் காட்ட விரும்புகின்றேன்.

**உவமைத்திறன்:** ஓர் இதயத்தின் ஏக்கத்தின் சிறப்புக் கெல்லாம் மணிமகுடம் சூட்டியது போல ஒளிர்வது உவமை அழகே ஆகும்.

இக் காவியத்தில் அழகு நடனமிடும் உவமைகள் அனைத்துமே புதிய உவமைகளாகவே இருக்கின்றன. புதிய உவமைகளுங்கூட செயற்கையாகத் தேடிப்பிடித்துக் கொண்ட உவமைகளாக அமையாமல், இயற்கையாகவும் பொருத்த மாகவும், வந்து குவிந்திடும் காரணத்தால் மிகச் சிறப்பு பெறுகின்றன.

வாழ்க்கையோடு ஒட்டிய, பல எளிமையான, இனிமை யான உவமைகள் இக் காவியத்தை இறவாத காவியம் ஆகச் செய்கின்றன.

அவற்றுள் சில உவமைகள் இதோ:

பண்ணரசன் காவியத்தலைவன்.

பொன்மலர் காவியத்தலைவி.

பொன்மலரைப் பிரித்திருக்கும் பண்ணரசன், தலைவிக்கு எழுதும் கடிதத்தில்,

நீர்பிரிந்த நிலம்போல நானோ இங்கே
நின்பிரிவால் வறண்டுள்ளேன்! தாயை விட்டே
ஊர்பிரிந்த சிறுபள்ளி மாணவன்போல்
ஒவ்வொரு நாளுங் கலங்கி வாடுகின்றேன்!

கார்மேகம்போல் எந்தக் கணமும் வற்றாக்
கண்ணீரைச் சொரிகின்ற நிலையில் உள்ளேன்".

என்று தன் நிலையை விளக்குகின்றான். எவ்வளவு அழகாக உவமைகள் வரிக்குவரி வந்து பொருந்துகின்றன பார்த்தீர்களா!

அடுத்து அதே கடிதத்தில் தலைவன் இன்னும் ஒருபடி மேலே போய் உன் பிரிவால்,

"பொரி உருண்டை போலே நான் தக்கை யானேன்"

என்கின்றான். எந்த இலக்கியமும் நினைத்துக் கூடப் பார்க்காத புது உவமை இது. அனைவருக்கும் நன்கு விளங்கும் எளிய உவமை.

மீண்டும் நம் தலைவன் , தலைவி பிரிவால்

"புதிருக்குள் சிக்கியதோர் விடையேயானேன்!
பொய்மைக்குள் புகுந்தழியும் உண்மையானேன்!
விதிர்விதிர்த்துப் போனேன்நான்! இடிந்து போனேன்!
வெற்றிதனை இழந்திட்ட வீரனானேன்!
கொதி புனலின் கொதிப்பானேன் , வெம்மையாலே
கொப்புளித்த கொப்புளம்போல் ஆனேன் கண்ணே!"

என்றும்,

"நிலம் மழையால் சேறாகிப் போன தைப்போல்"
தனது மனமும் குழம்பியுள்ள தாகவும் "முடங்கிப் போன

கலையானேன்! பயனற்ற கருவியானேன்!
கரையொதுங்கித் தவிக்கின்ற கப்பலானேன்!"

-என்றும்,

" முற்றுமுன்னே பறித்துவிட்ட காய்போல்! கொம்பில்
முழுதிலுமே பழுப்பதற்குள் வீழ்பழம்போல்
கற்றுத்தேர்ந் தறிவதற்குள் வறுமையாலே
கல்வியினை நிறுத்திவிட்ட தோழனைப்போல்"

-நம் காதல் முதிர்வதற்குள் பிரிந்துவிட்டாயே அன்பே! என்றும் கூறும் பகுதிகளின் உவமைகளை நாம் சுவைக்காமல் இருக்க முடியுமா?

மீண்டும் தலைவன் , தலைவிக்காகக்

"காத்திருப்பேன்! பலநூறு ஆண்டா னாலும்
கரிகாலன் கல்லணையின் சிலையைப் போலே காத்திருப்பேன்!"

என்று கூறுவது உவமைச் சுவையின் உச்ச கட்டமாகும்

இனி,

பண்ணரசனின் கடிதங்கண்ட பொன்மலர் விடைமடல் விடுக்கின்றாள்;

தலைவியும் பிரிவு குறித்து வருந்தி,
"பனிப்புயலில் சிக்குண்ட ப்றவை யானோம்"

-என்று குறிக்கின்றாள்.

தன்னை ஒருவன் காதலிக்கின்றான் என்பதை அறிந்தபின்தான் பெண்ணிடத்தில் பெண்மை முழுவதும் ததும்பும், அப்போதுதான் அவள் புதுக் கிளர்ச்சி பெறுவாள், என்பதைப் புலப்படுத்தும் வகையில் தலைவி

"வலைபோன்ற உங்கள்பொன் மாயக் கண்கள்
வட்டமிட்டே என்மீது வளைந்த பின்போ
உலைநீரின் அரிசிவெந்து மலர்ந்த தேபோல்
ஒளிபெற்றேன்! பெண்மையெனும் பெருமை பெற்றேன்!"

-எனவும்

ஆனால் அவன் பிரிவால்,

"வெறிச்சோடிக் கிடக்கின்றேன்; விளைந்த நன்செய்
விளைநிலமோ அறுவடைக்குப் பின்பு காய்ந்து
வெறிச்சோடிக் கிடப்பதைப் போல்"

__________என்றுங் கூறும் பகுதிகள் உளத்தை மிகவும் கவர்கின்றன.

**அடுத்து–**

பொன்மலர் மாற்றானின் மனைவியாகப் போகின்றாள் என்பதை அறிந்த பண்ணரசன் தூக்க மாத்திரைகளைச் சாப்பிட்டு எழுதி வைத்த இறுதி மடலில்;

'காய் பழுத்துக் கனியாகும் நேரம்; சின்ன
கல்லடியால் தரைவீழ்தல் போல் போகின்றேன்!'
பாளம் போல் நிலம்வெடித்த பாங்காய், அந்தப்
பாவையால் மனம்வெடித்த தால்போகின்றேன்!'

-என்று கூறுவன அழகிய உவமைகள். தனது மனம்.

"குமைந்திருக்கும் பொற்கொல்லன் வீட்டிலுள்ள
கும்மட்டிச் சட்டியாய்க்"

குமைந்திருந்ததாகப் பண்ணரசன் கூறுவதும் நல்ல உவமை.

இக்கடிதத்தை முடிக்கும் பண்ணரசன் நடுங்கிக் கொண்டே முடிக்கிறான்.

" பனிக்காலக் குளிர்நீரில் குளிக்கும்போது
பல்நெடுங்கும் உடல்நடுங்கும் உயிர் நடுங்கும்"

அது போல் நான் நடுங்குகின்றேன் - என்று பண்ணரசன் கூறுவதாக அமையும் உவமை வாழ்க்கையில் அன்றாடம் ஒப்பிட்டுப் பார்த்து மகிழும் பொருத்தமான உவமை.

**அடுத்து–**

பண்ணரசனின் உயிர் ஊசலாடுவதை செய்தித்தாள்களின் மூலம் அறிந்த பொன்மலர் அடைந்த திகைப்பினுக்கு உதாரணமாக

"திகைப்பூண்டுச் செடி மிதித்தாற் போலே"

-என்று கூறுவது வியந்து மகிழும் உவமை.

மென்மையான பெண்ணுள்ளம், பாச வெறி பிடித்த பைத்தியமாகிக் கிளம்பும் போது அவள் கூறுகின்றாள். வாழ்ந்தால் பண்ணரசனோடுதான் வாழ்வேன் இன்றேல்

"நீரில், மண்பொம்மை கரைதல் போல் கரைவேன்"!

என்று கூறும் உவமை உயர்வு மிக்கது.

அடுத்து,

மருத்துவமனையில் பண்ணரசன்.

மருத்துவர்களின் அயராத உழைப்பால் மீண்டும் கண்விழிக்கிறான். அதனைக் கவிஞர்-

“தெளிந்திருந்தும் கல்விழுந்ததால்கலங்கித்
தெளிவற்ற குளத்து நீர்ப் பரப்பைப் போன்று
தெளிந்திருந்தான் தெளிவற்றுப் போனான்; மீண்டும்
தெளிவுக்கு வந்துவிட்டான்” “கோலமாவைத்
தெளித்ததுபோல் மெல்ல மெல்ல நினைவு பெற்றான்”

என்று குறிப்பிடுவதும் சிறப்பின் சிகரங்கள்.

கும்மியடிக் கும்மங்கை சுழல்தல் போன்று
குறுக்கும்நெடுக் கும்ஒடி இறுதியாகப்
பொம்மைபோல் படுக்கைமேல் படுத்தி ருந்த
பண்ணணரசைப் பூம்பாவை கண்டு கொண்டாள்

–எனத் தீட்டும் உவமைகள் இதுவரை எந்தக் கவிஞனாலும் காட்டப்படாத இயற்கை உவமைகள்.

அடையாளங் கண்டுகொண்ட நங்கை “ அத்தான் அத்தான்” என்று கதற, அவளைப் பண்ணரசன் பார்க்கின்றான, அவன் மயக்க முற்றிருப்பதால் அவன் கண்கட்கு அவள்

“பனிப் புகைக்குள் தெரிவது போல்” தெரிகின்றாளாம்!

மணமகள் பொன்மலரை மணவீட்டில் காணவில்லை. அங்கே குழுமியிருக்கும் உறவினர் நண்பர் அனைவரும் பல கதைகள் பேசினார்களாம். அதனைக்

“கணகணக்கும் பள்ளிமணி ஓசை போன்று
கற்பனைப்பேச் சில் விடு கலந்ததம்மா!”

-என்ற உவமையால் விளக்குவது நினைவில் நிலைக்கிறது.

அப்போது பொன்மலரின் தந்தை,

"பூகம்பத்தில் கருதியதோர் நகரம் போல்"

இடிந்து சோர்ந்து இருந்தார் எனக் குறிப்பிடும் உவமையும் உள்ளத் துடிப்பினை, குமுறலைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றது.

அடுத்து கவிஞர் பொன்மலரைக் குறிக்கும் போது,

"நன்செய்ப் பயிர்முகமாய் முகங்காட்டித்
'தெம்பை ஊட்டும் பாவலனின் வாழ்வரசி'

என்னும் போது நமக்கு நன்செய் நிலத்தின் பசுமையும் குளுகுளுப்பும் அதே நேரத்தில் அந்த எழில் மங்கையின் கோலத் திருமுகமும் ஒன்றாகத் கலந்து நம் நினைவில் இன்பக் கூத்து நடத்துகின்றன.

மகள் மணத்தினை வகையாக நடத்துவதற்கு ஆழ்ந்த சிந்தனை செய்யும் அன்பு நாயகத்தின் முகத்தினை

" புகைச் சுருட்டால் பழுத்து விட்ட கிழவன் மீசை
போல்' பழுத்த உணர்வுகளோ முகத்தில் தேங்க"

முகத்தில் தேங்கி இருந்தன, என்று குறிப்பிடும் இடமும்; மகள் விருப்பம் போலவே மணம் நடத்த வந்திருக்கும் தந்தை அன்பு நாயகத்தையும், தாயினையும் மற்ற சுற்றத்தையும் கண்ட பொன்மலர், 'இவர்கள் நம்மை முத்துவுக்கே மீண்டும் மணம் முடித்து வைக்க வந்திருக்கின்றார்கள்' என்று எண்ணி நடுங்கி மயங்கி விழுகின்றாள் அந்த நிலையினைக் கவிஞர்.

'தென்றலாலே
கதிர்சாய்தல் போல் தலையைச் சாய்த்தே அத்தக் கன்னிமலர்
தரைதழுவிச் சாய்ந்ததம்மா!

என்னும் இடமும் மிகமிக அழகான உவமைகளாகும்.

அடுத்து,

கவிஞர், வேட்கையுற்ற காதலரை இணைப்பதுதான் உயர்ந்த அருட்செயல் பிரிப்பதல்ல; என்பதனை விளக்க

'தண்ணீரின் வேட்கையினால் தவிப்போர் தாகம்
தவிர்ப்பதுதான் அருள்மனத்தார் கடமையாகும்'

என்று, இளங்காதல் உள்ளங்களின் வேட்கையினை உயிர்ப் பிரச்சினையாகிய நீர்வேட்கையோடு ஒப்பிடுவது நினைத்து இன்புறத் தக்கது. பண்ணரசன் மடிமீது பொன்மலர் மயங்கிய நிலையில் கிடக்கின்றாள். அக் கட்சியினைக் கவிஞர்,

"கோடை தந்த வெம்மையினால் வெதும்பிப் போன
குழந்தைபோல்"

மங்கை ஆடாமல் அசையாமல் கிடந்தாள் என்று காட்டும் உவமையினை கொடுங்கோடை காலத்தில் நினைக்கும் போதோ நம்மையும் அறியாமல் காவியத் தலைவியின்மேல் நாம் மிகவும் பரிதாபப் படுகின்றோம்.

இனி, பண்ணரசன் பொன்மலர் திருமணத்தினைத் தாம் வரவேற்பதாகவும் தாமே முன்னின்று நடத்தப் போவதாகவும் கூறும் பொன்மலரின் தந்தை அச் செய்தியை மாப்பிள்ளை (பண்ணரசன்) யின் கையினைப் பிடித்துக்கொண்டு கூறுகிறாராம். அப்போது பண்ணரசனை,

"வள்ளுவனின் குறள்போல அடக்கமாக
வக்கணையாய் நின்றிருந்த புலவன்"

என்று குறிப்பிடும் இடம் மிக மிக அழகு வாய்ந்தது.

பார்த்தீர்களா! உவமைகளின் நயத்தினை 'ஓர் இதயத்தின் ரக்கம்' ஓர் உவமைக் களஞ்சியம். அவற்றுள் சில உவமைகளைத் தான் இங்கே காட்டினேன். இவற்றைப்போல இன்னும் எத்தனையோ உவமைகள் இந்தக் காவியத்துள் தளிர்நடை இடுகின்றன. செயற்கையாக உவமைகளைப் புகுத்தாமல், இயற்கை யாகவே கதையின் ஓட்டம் கெடாமல், அதற்கு மெருகூட்டும் வகையில் உவமைகளை அமைத்த கவிஞர். 'பொன்னடியார்' அவர்களை 'உவமைப் பெருங்கவிஞர்' என்பது பொருத்தமாகும்.

சென்னை – 14 அன்புள்ள,
19 - 8 - 68 புலவர் க. முருகானந்தம்




"நீர்பிரிந்த நிலம்போலே; நானோ இங்கே
நின்பிரிவால் வறண்டுள்ளேன்!"

*பண்ணரசன், மலர்ந்துகொண்டிருக்கும் ஒரு மக்கள் கவிஞன். வாழ்க்கைச் சூழல் காரணமாக ஓர் அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கின்றான். அங்கே கன்னி ஒருத்தி அவன் இதயத்தைக் கவர்கின்றாள். அவள் பெயர் பொன்மலர். அவளும் அவனும் ஊமை அன்பில் கலக்கின்றனர். அந்த அன்பு கனியுமுன்பே அவள் வேற்றூருக்கு மாற்றலாகின்றாள். அவள் பிரிவு அவனுள்ளத்தில் ஏற்படுத்திய ஏக்கம் பெரிது. அதன் விளைவு, அவள் அருகில் இருந்தபோது வராத துணிவு, இப்போது பீரிட்டு எழுகின்றது - கடித வடிவில்:*

புதுமணத்தை, பொன்னொளியை, கோடைக் காலப்
பூங்காற்றை, குளிர்நிலவை, அழகின் கூத்தை,
மதுமலரை எல்லாம்நான் வெறுத்து விட்டேன்!
மலர்ந்துவரும் இன்பமெலாம் ஒதுக்கி விட்டேன்!
சிதையாத பேரழகுச் சிலையே! என்றன்
சிந்தைக்குத் தெம்பளிக்குங் கலையே! அன்பே!
இதுவரையில் உன்பிரிவைத் தாங்கிக் கொண்டேன்–
இனிப்பொறுக்க முடியாது முடியா தம்மா!

நீர்பிரிந்த நிலம்போலே நானோ இங்கே
நின்பிரிவால் வறண்டுள்ளேன்! தாயை விட்டே
ஊர்பிரிந்த சிறுபள்ளி மாண வன்போல்
ஒவ்வொருநா ளுங்கலங்கி வாடுகின்றேன்!
கார்மேகம் போல்எந்தக் கணமும் வற்றாக்
கண்ணீரைச் சொரிகின்ற நிலையில் உள்ளேன்!
சீர்மகளே! எனக்காகப் பிறந்தி ருந்தும்
சிந்தை – என் சிந்தைதனைச் சிதைய வைத்தல்–

*சரிதானா? சரிதானா? சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையே தானா?*

உன்முகத்தை, ஆம்! உன்றன் ஒளிமு கத்தை,
உயிருட்டி எனைக்காக்கும் கலைமு கத்தை,
புன்னகையே தவழும்உன் பூமு கத்தைப்
பூக்காடே! நான்காண வேண்டும் மீண்டும்!
கண்ணாலே சிரிப்பாயே! முகத்தைப் பொத்திக்
கைவிரலின் இடுக்காலே எனைப்பார்ப் பாயே –
என்னமுதே அக்காட்சி தன்னில் நீந்தி
என்னிதயம் குளிக்கும்நாள் வரும்நாள் எந்நாள்?

இரவெல்லாம் துளித் தூக்க மில்லை; என்றன்
எண்ணமெலாம் உன்நினைவே நிறைவ தன்றிப்
பிறநினைவோ பிழைக்கின்ற நினைவோ இல்லை!
பெற்றோர்உற் றோர்உறவில் பிடிப்பே இல்லை!
சரியாக நீபோன நாளாய், அன்பே!
சாப்பாடு தண்ணியில்லை! உணர்வே இல்லை!
பொரிஉருண்டை போலேநான் தக்கை யானேன்!
புலம்புகின்றேன் கனவினிலே கட்டி லின்மேல்!

எதிர்பாரா விதமாக வேற்றூ ருக்கோ
என்னரசி நீபிரிந்து சென்ற போதோ
புதிருக்குள் சிக்கியதோர் விடையே யானேன்!
பொய்மைக்குள் புகுந்தழியும் உண்மை யானேன்!
விதிர்விதிர்த்துப் போனேன் நான்; இடிந்து போனேன்!
வெற்றிதனை இழந்திட்ட வீர னானேன்!
கொதிபுனலின் கொதிப்பானேன்; வெம்மை யாலே
கொப்புளித்த கொப்புளம்போல் ஆனேன் கண்ணே!

*சரிதானா சரிதானா சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையே தானா?*

கலங்குகின்ற கண்களுடன் என்னை வந்து
கண்டாயே விடைபெற்றுப் போவ தற்கு!
நிலம்மழையால் சேறாகிப் போன தைப்போல்
நிறையழகே! அன்றுமுதல் குழம்பிப் போனேன்!
துலக்கமினி என்வாழ்வில் உன்னா லன்றித்
தோன்றாது வேறொன்றால்; முடங்கிப் போன
கலையானேன்! பயனற்ற கருவி யானேன்!
கரையொதுங்கித் தவிக்கின்ற கப்ப லானேன்!

முற்றுமுன்னே பறித்துவிட்ட காய்போல்; கொம்பில்
முழுதாகப் பழுப்பதற்குள் வீழ்ப ழம்போல்;
கற்றுத்தேர்ந்த தறிவதற்குள் வறுமை யாலே
கல்வியினை நிறுத்திவிட்ட மாண வன்போல்
முற்றிவந்த நம்உறவில் பிரிவுத் துன்பம்
முளைத்ததென்பேன்! இருக்கட்டும்; அதனால் என்ன?
இற்றுவிட வில்லையது கண்ணே! நூலின்
இழைபோலே அவ்வுறவைப் பேணிக் காப்போம்!

பொருள்புதைந்த பார்வையினால்; அடக்கத் தோடு
பூக்கின்ற புன்னகையால்; மழைக்கா லத்தில்
கரைமீறிப் பாய்கின்ற வெள்ளம் போன்ற
கலகலப்புப் புதுச்சிரிப்பால் எல்லாம்; காதற்
சிறகுதனை முளைக்கவைத்தாய் என்னுள் ளத்தில்!
சித்தன் – என் துறவுணர்வைக் கலைத்து விட்டாய்!
அருள்வடிவே! என்இறைவி! பித்த னானேன்!
அருள்வேண்டும்! உன்அருளால் மீட்சி வேண்டும்!

*சரிதானா சரிதானா சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையே தானா?*

ஓடுகின்ற உந்துவண்டி ஒன்றில்; ஓர்நாள்
உனைக்கண்டேன் தற்செயலாய்; மலையி னின்றே
ஓடிவரும் நீரருவி யாகத் தாவி
உன்னருகில் வந்தமர்ந்தேன்; சுற்றியுள்ள
கோடிவகைக் கண்களுக்கும் அஞ்ச வில்லை!
கொட்டிவிடத் துடித்தேன்என் குமுறல் எல்லாம்!
பாடிவந்த தேனாறே! பருவம் தோய்ந்த
பனிமலரே! கூச்சத்தால் குழறிப் போனேன்!

என்தோழர் குழுவுடனே அன்பு நண்பர்
எழிலமுதன் திருமணத்தை வாழ்த்த வந்தேன்:
உன்தோழிக் குழுவுடனே நீயும் அங்கே
ஒளிவெள்ள மாய்த்தோன்றிக் காட்சி தந்தாய்!
பின்என்ன–நாமிருவர் விழிக ளாலே
பேசாத தெல்லாமும் பேசித் தீர்த்தோம்!
தண்ணமுதே! தோழர்க்குத் தெரியா வண்ணம்
தலையாட்டி விடைபெற்றோம்! பழங்க தைதான்!

தமிழ்க்கவிஞன் என்நண்பன்; நிகரில் லாத
தலைவணங்காப் புகழ்க்கவிஞன் ஏழைத் தோழன்
தமிழ் ஒளியும் இப்படித்தான் ஒருத்தி யின்மேல்
தணியாத அன்புவைத்தான்; காத லித்தான்!
குமிழ்ச்சிரிப்புச் காரியும்அக் கவிஞன் மேலே
கொள்ளைஆசைவைத்தாள்! புயலில் சிக்கும்
சிமிழ்விளக்காய்ப் போனதவர் உறவும் வாழ்வும்!
சாகும்வரை அவள்நினைவாய்ப் போனான் அன்பன்!

இளங்கவிஞன்; இங்கிலாந்து பெற்றுத் தந்த
இனியகாதற் கனிக்கவிஞன்; வைய மக்கள்
உளந்தொட்ட உயர்கவிஞன் கீட்சு கூட
ஒருத்தியைத்தான் காதலித்தான் மடல்வ ரைந்தான்!
இளகவில்லை பேய்மகளின் நெஞ்சம்; ஏங்கி
இருபத்தே ழாம்வயதில் உருக்கி நோயால்
பிளந்ததொரு மலைபோல மாண்டு போனான்!
பிறகும் அவ் வரலாறு நீள வைத்தல்–

*சரிதானா சரிதானா சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையேதானா?*

புவியீர்ப்பின் ஆற்றலின்றி உலகம் இல்லை
புருவமின்றி என்கண்ணே! கண்க ளில்லை!
கவிழ்மேக மின்றியிங்கே மழையும் இல்லை!
கரையின்றி ஆறில்லை! மறையா இன்பக்
கவிதையின்றி இலக்கியமும் பூப்ப தில்லை!
கனிச்சாறே நீயின்றி நானும் இல்லை!
தவிக்கின்றேன்! தவிக்கின்றேன்! தவிக்கின் றேனே!
தணற்காட்டில் நடக்கின்றேன் நடக்கின் றேனே!

இளஞ்சிவப்பு ரோசாப்பூ நிறச்சே லைக்குள்
எடுப்பான உன்னுடலை மறைத்தே; அந்த
வளமான பேரமைதிச் சிரிப்பை வீசி
வக்கணையாய் ஒயிலாக நடப்பா யேநீ!
குளுகுளுப்பில் இன்றுமெனை அந்தக் காட்சி
குளிப்பாட்டி மகிழ்விக்கும்; தயிர்போல் மேனி
தளதளக்கும் பூப்பந்தே! கூச்ச மின்றித்
தந்துவிடு தந்துவிடு 'உன்னி சைவை'!

"முகத்தில்பரு முளைத்தது ஏன் தோழா! எந்த
முத்தழகி மேல்மோகம் வைத்தாய்?" என்றே
எகத் தாள மாய்க்கேட்டே என்றன் தோழர்
இல்லாத கேலியெல்லாம் பேசு கின்றார்!
அகத்துறையே! உன்மேல்தான் மோகம் வைத்தேன்!
அதனால்என் உடல்வெப்ப மான தாலே
முகத்தில்பரு முளைத்ததென்பேன்! உன்பே ரன்பில்
முகிழ்த்தெழுந்தால் துயரெல்லாம் தீர்ந்து போகும்!

"உடம்பிளைத்து விட்டதுவே! பாலில் முட்டை
ஒவ்வொருநா ளுங்கலந்தே உண்டு வந்தால்
உடல்தேறும்! தயிர்மோரும் பழங்க ளும்நீர்
உணவில் அதி கம்சேர்க்க வேண்டு" என்றே

தொடர்ந்துபலர் அறிவுரையும் கூறுகின்றார்!
துணைநீ என் தோள்தொத்தும் பேறு பெற்றால்
உடம்பெனக்கோ உப்பிவிடும்! உலகந் தன்னை
ஓர்நொடியில் பெயர்த்தெடுக்கும் ஆற்றல் பூக்கும்!

*சரிதானா சரிதானா சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையே தானா?*

சாதிவெறி மதவெறியும்; மூடப் போக்குச்
சண்டாளர் பழம்வெறியும் நமக்குள் இல்லை!
பாதிஉயிர் என்னுயிரில் உன்னு யிர்தான்!
பரம்பொருளே வந்தாலும்; பின்னும் அன்பின்
கோதறுக்க முடியாது! நமைப்பி ரிக்கக்
குளறுபடி நடந்தாலோ ஒருகை பார்ப்பேன்!
தீ தற்ற பசும்பொன்னே! உன்னி சைவின்
திசைநோக்கித் தெண்டனிட்டுக் கிடக்கின் றேன்நான்!

உன்னைத்தான் உன்னைத்தான் மணப்பேன், வேறு
ஒருத்தியையும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன்!
உன்னைத்தான் உன்னைத்தான் வாழ்நா ளெல்லாம்
உளங்கலந்த உயர்துணையாய் ஏற்றுக் கொள்வேன்!
உன்னைத்தான் உன்னைத்தான் சுவைப்பேன்; இந்த
உலகத்தில் வேறெதையும் சுவைக்க மாட்டேன்!
உன்னைத்தான் என் வாழ்வுப் பேராட் சிக்கே
உயர்தலைவி யாக்கிவைத்துப் பாடி நிற்பேன்!

காவியங்கள் பலபடைப்பேன்; உன்பொன் மீனாம்
கண்களைசை(வு) எனக்கென்றே இருந்து விட்டால்
சாவண்டாப் பேரிலக்கி யங்கள் எல்லாம்
சரித்திரங்கள் போற்றுவணம் நூற்று வைப்பேன்!

ஓவியப்பூ நீ என்றன் குடங்கைக் குள்ளே
ஒட்டிவிட்டால் உலகின்முதற் கவிஞ னாவேன்!
தேவி—என் தேவி—ஓ தேவி! உன்றன்
தேன்மனத்தை எனக்குரிமை ஆக்கல் என்றோ?

மற்றவர்க்காய் அஞ்சுவதும்; அன்னை தந்தை
மனம்வருந்தும் என்பதற்காய் என்றன் மீது
பற்றிருந்தும் பற்றில்லாத் துறவி போலப்
பகல்வேடம் போடுவதும் நமக்குக் கேடு!
நெற்றுவற்றிப் போவதைப்போல் வற்றிப் போகும்
நெஞ்சம்—என் நெஞ்சம்—ஆம் உன்னால் என்பேன்!
இற்றுவிடும் என் வாழ்வு! உடனே உன்றன்
இதயத்தின் பதில்தேவை; பதில்தான் தேவை!

காத்திருப்பேன் ஆம்...ஆம்...ஆம்! கருணை யாலே
கனிந்துனது மனம்எனக்கே ஆகு(ம்) மட்டும்
காத்திருப்பேன்! பலநூறு ஆண்டா னாலும்
கரிகாலன் கல்லணையின் சிலையைப் போலே
காத்திருப்பேன்! உலகோர்க்கே அஞ்சி டாது
கலங்கும்என் கரம்பற்ற வருமட்டும் நான்
காத்திருப்பேன் குன்றம்போல்! இன்றேல்—; தீயில்
கருகியதோர் மரம்போலே பட்டுப் போவேன்!

*சரிதானா சரிதானா சரியே தானா?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையயே தானா?*






**" வெறிசோடிக் கிடக்கின்றேன்; விளைந்த நன்செய்
விளைநிலமோ அறுவடைக்குப் பின்பு காய்ந்து
வெறிச்சோடிக் கிடப்பதைப்போல்...."**

***ப****ருவக் கிளிகள் இருவரும் ஒருவரை ஒருவர் காதலித்தனர். ஆனால், அந்தக் காதலை வெளிக்காட்டாமல் உள்ளத்திற்குள்ளேயே மூடி வைத்திருந்தனர். எனவே பிரிவு வந்தது: அதைத் தொடர்ந்து அவன் கடிதம் சென்றது. காதலித்தவனின் கடிதம் கண்ட அவள் கலக்கத்தின் வடிவானாள். முறைப் பையன் முத்துவுக்கு மணம் முடிக்கப் பெற்றோர் எடுத்த முடிவைக் கூறி, வெறுமையாகிவிட்ட தன் இதயக் குமுறலைக் கூறி ஆசி வேண்டுகின்றாள்.... விளக்க முடியா வேதனை வடிவாகி வேறு வழியறியாக் காரணத்தால் விடை பெறுகின்றாள்:*

வணக்கத்திற் குரியவரே! எனக்காய் ஏங்கி
வாடுகின்ற அன்புயிரே! அருளே! வாழ்க!
கணக்கற்ற பெருந்துயரில் உங்க ளைப்போல்
கசிந்துருகிக் கவிழ்ந்துள்ள பேதைப் பெண்ணாள்
வணங்குகின்றேன் கரங்கூப்பி: கண்ணீர் சிந்தி
வதைபடும்என் நெஞ்சத்தைப் படம்பி டித்துப்
பணங்கோடி தந்தாலும் ஈடா காத
பாசத்தால் இறுதிமடல் தீட்டு கின்றேன்!

என்மீதும் என்நலத்தின் மீதும்; தங்கள்
இனியமனம் கொண்டிருந்த உணர்ச்சி தோய்ந்த
இன்னுணர்ச்சிக் கவிதைமடல் கண்ட போதோ
இயங்காமல் நின்றுவிட்ட இதய மானேன்!
பன்னாளாய் உழைத்தடைந்த செல்வம் எல்லாம்
பறிகொடுத்த ஏழைமகன் நிலையைப் பெற்றேன்!
என்னுயிரும் என்னுடலும் தவிக்கும் போதோ
எதைஎழுத? எதைச்சொல்ல! புரிய வில்லை?

"அத்தான்" என்றழைப்பதற்கும், ஆசை யோடே
ஆருயிரே என்பதற்கும்; மற்றோர் முன்னே
பித்தாகி"அவர்–இவர்" என் றுங்க ளைநான்
பெருமையுடன் உரைப்பதற்கும் பேறில் லாத
சொத்தைமக ளாகிவிட்டேன்; வாழ்வில் உங்கள்
சொத்தாகும் பெருமையினை இழந்து விட்டேன்!
இத்தரையில் எனக்கினிமேல் அமைதி இல்லை!
எதை எழுத? எதைச்சொல்ல? புரிய வில்லை?

எனக்கும்ஓர் இதயமுண்டு; அதற்குள் வாடா
எண்ணங்கள் ஏக்கங்கள் முளைப்ப துண்டு!
மனக்கதவு மூடப்பட் டேயி ருந்தால்
மனிதனில்லை; உலகத்தின் இயக்கம் இல்லை!

இனிப்போடே இனிப்பிணைத்தால் இனிக்கும் என்ற
எண்ணத்தால் நாமிருவர் நனைந்தோம் அன்பில்!
பனிப்புயலில் சிக்குண்ட பறவை யானோம்
பாதிவழி யில் பிரிந்த துணைக ளானோம்!

என்னழகை என்சிரிப்பை; உங்கள் நெஞ்சை
இழுத்துலுக்கி மயங்கவைத்த வண்ண வண்ண
என்னுடையை, என்நடையை எல்லாம்; நீங்கள்
எழுத்தாலே சிறைப்படுத்தி வைத் திருந்த
பொன்னெழுத்துத் துயர் மடலைக் கண்டபோது–
பூரிப்புத் தளும்புமந்தப் பூமு கத்தின்
புன்னகையால், தன்னடக்கப் போக்கால்; அன்புப்
பொங்கிவழி யும்கள்ள மற்ற பேச்சால்,

என்மனத்தை மாசுபடாப் பெண்ம னத்தை
ஏங்கவைத்துக் கறைபடிய வைத்த உங்கள்
பொன்னுருவத் தின்மேலே கோபம் பொங்கும்!
பொய்யில்லை! எனைப்பேதைப் பெண்ணாய் ஆக்கித்
தொன்னையுண்டு நெய்யில்லை என்ப தைப்போல்
தூயவளை இத்தனைநாள் தவிக்க விட்டீர்!
இன்செவிகள் உணர்விழந்த பின்போ; இன்ப
இசைக்கவிதை பாடுகின்றீர்! எதைநான் சொல்ல?

உங்களைநான் காதலித்தேன் உண்மை, – உண்மை!
உங்களைநான் என்னுயிராய் மதித்தேன் உண்மை!
பொங்கியெழும் உணர்விற்குள் இரண்டுள் ளங்கள்
புத்துருக்கு நெய்போலே மணந்த துண்மை!
தங்களை நான் பிரிந்துவந்த போதோ; சீறும்
தணற்குளியல் குளித்தவளாய் ஆனேன் உண்மை!
இங்கின்றோ கொடுமைச்சாக் காட்டில் சாய்ந்தேன்
எதைஎழுத? எதைச்சொல்ல? புரிய வில்லை!

உலகமென்றால் என்னவென்றும், சூழ்ந்து வாழ்வோர்
உள்ளமென்றால் என்னவென்றும் உணராச் சின்னக்
கிலுகிலுப்பை விளையாட்டுக் குழந்தை யாகக்
கேள்வியின்றி வாழ்ந்துவந்தேன் பருவம் வந்தும்!
வலைபோன்ற உங்கள்பொன் மாயக் கண்கள்
வட்டமிட்டே என்மீது வளைந்த பின்போ
உலைநீரில் அரிசிவெந்து மலர்ந்த தேபோல்
ஒளிபெற்றேன்; பெண்மையெனும் பெருமை பெற்றேன்!

காதலிக்கத் தெரிந்திருந்தோம்; ஆனால் அந்தக்
காதலினை வளர்ப்பதற்கும் காப்ப தற்கும்
காதலர்கள் நாமறிந்தோ மில்லை; பேடிக்
காற்றாடி மனிதர்க்கே அஞ்சித் துன்பக்
கூதலுக்குள் சிக்குண்டோம்! தோல்வி தன்னைக்
கோழைமனம் கொண்டதனால் அணைத்துக்கொண்டோம்!
மோதலுக்கும் சாதலுக்கும் துணிந்தி ருந்தால்
முழுவெற்றித் தேனாற்றில் கலந்திருப்போம்!

உள்ளத்தின் ஆசைகளை, கனவை எல்லாம்
உங்களைநான் பிரியுமுன்பே வெட்கம் விட்டே
உள்ளத்தில் உள்ளபடிக் கொட்டித் தீர்த்தே
ஒருமுடிவை எடுப்பதற்குத் துடித்து வந்தேன்!
பள்ளத்தின் நீர்போலே நீங்கள் அன்று
பலநண்பர் புடைசூழ இருந்த தாலே
வெள்ளத்தில் சிக்குண்ட துரும்பாய்க் கோடி
வெதும்பலுடன் குமுறலுடன் திரும்பி விட்டேன்!

இங்குவந்த நாள்முதலாய் எனக்கு வாழ்வோ
எரிசூளை, இரும்பாலை யான தென்பேன்!
தங்களருள் உருவத்தை மனத்துள் வைத்துத்
தழுவாத நொடிப்பொழுதும் கசந்த தென்பேன்!

மங்கலஞ்சேர் பேரழகே! என்னை நீங்கள்
மனதார விரும்புகின்ற சேதி தன்னை
அங்கேயே அறிந்திருந்தால்; உங்கள் வாழ்வின்
அடிமையாக நானொருத்தி பிணைந்தி ருப்பேன்!

பண்பாட்டால் நாணத்தால்; ஒழுக்கம் என்னும்
பகல்வேடப் பழம்போக்கால்; அஞ்சி அஞ்சிப்
புண்பட்டுப் போய்விட்டோம்! உலகத் தாரின்
புகைச்சலுக்கும் எரிச்சலுக்கும் பயந்த தாலே
வெண்பட்டுத் தூயநெஞ்சில் என்றும் ஆறா
வெட்டுக்காயம் ஒன்றைச் செய்து கொண்டோம்!
பண்பட்டு வளர்ந்துவந்த காதல் தன்னைப்
பக்குவமாய்க் காக்காது கெடுத்துக் கொண்டோம்!

கனவில்நான் நீந்தாத நாளே இல்லை!
கணவருங்கள் கையணைப்பில் தவழ்ந்து; நாளும்
இனிமையுடன் இல்லறத்தை நடத்தல் போலும்,
இல்லாத இன்பமெல்லாம் துய்த்தல் போலும்,
“மனைவிக்கு இலக்கணமே நீதான்” என்று
மன்னர் நீர் என்கன்னம் சுவைத்தல் போலும்
தினம்கனவு! அதனாலே உளறல் – ஏக்கம்!
தித்திப்பை நினைத்தமனச் சப்புச் கொட்டல்!

பருவமகள் ஏக்கத்தை; கனவில் அந்தப்
பாவைமகள் படும்பாட்டை எல்லாங் கண்டும்
திருமணப்பேச் சைத் தொடங்கா அன்னை தந்தை
திருநாட்டில் வாழ்வதுண்டா? என்பெற்றோரும்
குறை–என்றன் குறைதீர்க்க உள்ள றையில்
கூடிநிதம் மணத்திட்டம் தீட்ட லானார்!
முறைப்பையன் ஒன்றுவிட்ட மாமன் பையன்
முத்துவுக்கு மணமுடிக்க, நாளும் வைத்தார்!

மறுப்பதற்குத் தெம்பெனக்கோ இல்லை; வீட்டார்
மனம்நோக வைப்பதற்கும் துணிவே இல்லை!
சிறைப்பறவை யானதமிழ்ப் பெண்ணி னத்தார்
சீறுகின்ற புலியாகும் வரைக்கும்; இங்கே
திரைமறைவு நாடகங்கள் மணச்ச டங்கில்
தினம்நடக்கும்–மூடாக்குப் போக்கே பூக்கும்!
விரும்புகின்ற ஒருவரையே மணப்பேன் என்றால்
வெடிக்கின்ற குமுறல்களோ நூறு! நூறு!

அப்பப்பா! பொய்மனிதர் கூட்டத் தோடே
யாராலே போராட முடியும்? இங்கே
இப்போது கிடைத்த உங்கள் கடிதம்; இன்னும்
இரண்டுநாள் முன்னாலே கிடைத்தி ருந்தால்
தப்பாமல் ஓடோடி வந்தி ருப்பேன்
தமிழ்நெஞ்சே! உங்கள்நெஞ் சணைவ தற்கு!
எப்பகையும் எதிர்த்திருப்பேன்! ஆனால் இங்கே
எல்லாமும் முடிந்துவிட்ட பின்என் செய்வேன்?

விடைபெற்றுக் கொள்கின்றேன்; தலைக்கு மேலே
வெள்ளம்வந் தாடுகையில் வழிவே றில்லை!
நடைப்பிணமாய் இனிவாழப் போகும் இந்த
நங்கையினை உடன்மறந்து விடுங்கள்; மாற்றார்
கடைச்சரக்காய் மாறிவிட்ட என்னை உங்கள்
கவியுளத்தால் மன்னித்து வாழ்த்தி டுங்கள்!
உடைமாற்றிக் கொள்வதைப்போல் மனத்தை மாற்றும்
உலகத்தார் போலிவழி போகின் றேன்நான்!

ஒரு பெரிய இலக்கியத்து மேதைக் கென்றன்
உள்ளத்தை ஒப்படைக்கும் பேறில் லாத
திருவழிந்த பெண்மகளாய் ஆகி விட்டேன்!
திருநாடே! தென்தமிழே! என்உள் ளத்தில்

உருப்பெற்று வந்தஎழில் ஓவி யத்தை
ஒருநொடியில் அழித்துவிட்டேன் பிறருக்கு அஞ்சி!
பெருமகனே! பைத்தியமாய் வாழப் போகும்
பெண்மகளை மனதார வாழ்த்தி டுங்கள்!

கரம்பற்றப் போகின்ற கணவ ரோடு
கற்பும களாய்வாழ அருள்தா ருங்கள்!
இரும்பாக்கிக் கொள்ளுங்கள் உங்கள் நெஞ்சை!
எனக்காக ஒருதுளியும் வருந்த வேண்டாம்!
திருமணத்தை வாழ்த்துதற்கும் கூட நீங்கள்
திருநெல் வேலிச்சீமை வரவே வேண்டாம்!
வெறுங்கனவாய் விளையாட்டாய்ப் போன இந்த
வெதும்பல்கள் சாகும்வரை என்னுள் வாழும்!

முல்லைப்பூ ரோஜாப்பூ இரண்டும் உங்கள்
மனம்விரும்பும் பூக்க ளன்றோ? அதனால் அந்தக்
கொள்ளையழ குப்பூக்கள் சூட மாட்டேன்
கூந்தலிலே! அந்நிறத்தில் ஆடை கூட
மெல்லுடலில் நான் அணிய மாட்டேன்; நீங்கள்
மிகையாக விரும்புவதை விரும்ப மாட்டேன்!
இரும்பொறையே! மனத்தாலும் செயலா லும்நான்
இல்லறத்தை நடத்தவுங்கள் ஆசி வேண்டும்!

கண்ணீரை... கண்ணீரை..என்கண் ணீரைக்
காணிக்கை யாக்குகின்றேன் உங்க ளுக்கே!
எண்ணாத எண்ணமெலாம் எண்ணு கின்றேன்!
எதைஎழுத? எதைச்சொல்ல? புரிய வில்லை!
பின்னால்நான் பெறப்போகும் செல்வ னுக்குப்
பெருமையுடன் உங்கள்திருப் பெயரே வைப்பேன்!
என்செல்வ மகள்பெயரோ நீங்கள் யாத்த
இனியதொரு இலக்கியத்தின் தலைப்பைத் தாங்கும்!

மனமுடைந்து போகாமல் ஒருத்தி யைநீர்
மணமுடித்தே இல்லறத்தைச் சுவைக்க வேண்டும்
தனிக்கட்டையாய் வாழ்ந்து வெறுப்பில் வீழ்ந்து
தமிழ்க்கடலே! உடலைப் பாழாக்க வேண்டாம்!
மனைவியுடன் குழந்தையுடன் ஒருநாள் என்றன்
மனைதேடி விருந்திற்கு வரத்தான் வேண்டும்!
கனிச்சாறாம் அக்குழந்தைக் கன்னத்தில் நான்
கணக்கில்லா முத்தங்கள் பொழிய வேண்டும்!

வெறிச்சோடிக் கிடக்கின்றேன்...விளைந்த நன்செய்
விளைநிலமோ அறுவடைக்குப் பின்பு காய்ந்து
வெறிச்சோடிக் கிடப்பதைப்போல்! ஒன்றே ஒன்று...
வேதனையை, நம்கூத்தை வெளிக்காட் டாது
மறைத்திடுங்கள்! மூடிவைத்துக் கழுத்த றுக்கும்
மனிதரினம் என்மீது பழியைப் போடும்!
பிறைநிலவாய் உங்கள் புகழ் வளரும் செய்தி
பெறவேண்டும்! வேறென்ன எனக்கு வேண்டும்?






" என்னாசைக் கனவுகளே கலைந்து போங்கள்
என்னாசைக் கனவுகளே தொலைந்து போங்கள்!
மண்ணாகப் போகின்றேன்: நீங்கள் வேறு
மனிதர்களின் மனங்களினைக் கெடுக்கப் போங்கள்!"

அவன் இதயம் விரும்பியவளும் அவனை விரும்பினாள். இருவர் இதயத்தின் ஏக்கங்களும் ஒன்றாகி உறவாடுவதற்குள் காலங்கடந்து விட்டது. அவள் பெற்றோர் எடுத்த திருமண முடிவு இருவரையும் திக்கு முக்காட வைக்கின்றது.; திசைமாறிய பறவைகளாக்குகின்றது! விம்மி வெடிக்கின்ற வேதனையோடு விடைபெற்றுக் கொண்ட அவளால் உலகத்திலிருந்தே மீளா விடை பெற முடிவெடுக்கின்றான் - எண்ணற்ற மனக்கோட்டைகளைக் கட்டிக்கொண்டிருந்த பண்ணரசன்.

விடைபெற்றுக்கொள்கின்றேன்; தமிழ கத்தீர்!
விடைபெற்றுக் கொள்கின்றேன் – இறுதி யாக!
விடிவெள்ளி யாய்த்தோன்றி என்றன் வாழ்வில்
விளக்கேற்றி வைப்பதற்கே இருந்த தேவி
விடைபெற்றுக் கொண்டுவிட்ட துயர்தாங் காது
வெடிக்கப்போகும் நிலையின் நெஞ்சத் தோடு
விடைபெற்றுக் கொள்கின்றேன்! தாங்கொ ணாத
விம்மலுடன் வணங்கு கின்றேன் தோழரே நான்!

தூக்கத்தை, மீளாத நெடுந்தூக் கத்தைத்
துக்கத்தைத் தாளாமல் அணைத்துக் கொள்ளத்
தூக்கமருந் துண்டுவிட்டேன் – அளவு மீறி!
தூயவனின் ஓரிதயம் காதல் தோல்வி
ஏக்கத்தில் கருகலிலும் இறத்தல் நன்றே!
இங்கிருந்து வாழ்தலிலும் போதல் நன்றே!
நீக்கமற நிறைந்திருப்பேன்: உங்கள் நெஞ்சில்
நிழல்போலக் கவிதைகளாய்ப் படிந்தி ருப்பேன்!

தாய்தந்தை மனங்கோண வாழேன்; என்று
தன்வாழ்வை, என் வாழ்வை நெருப்பாக் கிட்ட
வாயற்ற ஊமைமகள் செய்கை யாலே
வளர்கவிஞன் மனமொடிந்து போகின் றேன்நான்!
காய்பழுத்துக் கனியாகும் நேரம்; சின்னக்
கல்லடியால் தரைவீழ்தல் போல்போ கின்றேன்!
நாய்களுக்கும் பற்றுப்பா சங்க ளுண்டு
நல்லறிவு மனிதர்கட்கோ எல்லாம் வேடம்!

மீளாத பெருஞ்சுமைக்குள் இந்த நாட்டை
மென்மேலும் போட்டழித்துச் சுரண்டு கின்ற
காளான்கள், மனிதஉருக் கோட்டான் கூட்டம்
கவிழ்வதற்குப் பீரங்கிக் கவிதை யாத்து

நாளெல்லாம் பாடுபட நினைத்திருந்தேன்!
நல்லோரே! நாட்டோரே! அவ்வெண் ணத்தில்
ஓலமிட்டே இடியொன்று வீழ்ந்த தாலே
உருவிழந்த நெடுமரமாய்ச் சாய்ந்து விட்டேன்!

காலமெல்லாம் பாடுபட்டும் அரைவ யிற்றுக்
கஞ்சிக்குத் திண்டாடும் ஏழை மக்கள்,
கோலஎழில் புதுவாழ்வில் குடிபு குந்து
குறைவற்று வாழ்வதற்கே; உங்க ளோடு
காலமெல்லாம் கைகோத்துத் தொண்டு செய்யக்
கனவுகண்டேன்; இருந்தவரை உழைத்தும் வந்தேன்!
பாளம்போல் நிலம்வெடித்த பாங்காய்; அந்தப்
பாவையினால் மனம்வெடித்த தால்போ கின்றேன்!

அவளுக்கே கொடுப்பதற்கு வைத்தி ருந்த
அன்புமுத்தங் கனைஅவளின் மடல்க ளுக்கே
தவறாமல் மறக்காமல் தந்து விட்டுத்
தழுவிவிட்டேன் மீளாத பெருமைச் சாவை!
அவளுக்கே கொடுப்பதற்கு வைத்தி ருந்த
அன்புளத்தை அவளுக்கே ஒதுக்கி வைத்துக்
கவலைகளே சூழ்ந்திருக்கத் தனிய னாகக்
கல்லறைக்குள் முடங்குதற்கு முடிவெ டுத்தேன்!

விரும்புவது கிடைப்பதில்லை; கொஞ்சங் கூட
விரும்பாது நாம் ஒதுக்கித் தள்ளும் ஒன்றோ
விரும்பிவந்து மடிபுரளும்; இதுதான் வாழ்க்கை
விந்தையெனில் இவ்வாழ்க்கை வேண்டாம் என்றே—
திரும்பிவர முடியாத மறைவு என்னும்
திசைநோக்கிச் செல்கின்றேன்; நடந்த தெல்லாம்
மறக்கின்ற நெஞ்செனக்கோ இருந்தி ருந்தால்
மனிதர்போல் நெடுங்காலம் வாழ்ந்தி ருப்பேன்!

குமைந்திருக்கும் பொற்கொல்லன் வீட்டி லுள்ள
கும்மட்டிச் சட்டியைப் போல் குமைந்தி ருந்தேன்!
அமைந்துவந்த பேரின்ப வாழ்வுக் கோட்டை
அழித்தபின்பும் உயிர் வாழ்தல் மானக் கேடே!
சுமைதாங்க முடியாத மென்ம னத்தில்
சுக்கல்நூ றாய்க்கீறல் விழுந்த பின்பும்
இமைதிறந்து மூச்சுவிடல் முடியா ஒன்றே—
என்னருமைத் தோழர்களே போகின் றேன்நான்!

ஓராயிரம் ஆசை அலைக்குள் சிக்கி
ஓரிதயம் ஏங்குகின்ற ஏக்கம் எல்லாம்
தீராத பேரேக்கம்! மனிதர்க் கஞ்சித்
தினவெடுத்தே உள்ளுக்குள் அரிக்கும் ஏக்கம்!
பாருள்ள வரைக்கும் இம் மக்கள் என்னும்
பயிருள்ள வரைக்கும் இங் கிருக்கும் ஏக்கம்!
ஆராலும் அணைக்கமுடியா அவ் வேக்கம்
அன்பென்னும் பெரும்பிடிக்குள் பிறந்த ஏக்கம்!

பணங்காசைப் பட்டத்தை வெறும்ப கட்டைப்
பார்த்திங்கே அப்பசைக்கே காத லிக்கும்
குணமுடைய ஓரினமே துளிர்க்கும் போது
கொள்கைக்கும் நாடு மொழி நல்வாழ்விற்கும்
பணிபுரியும் என்போன்ற ஒருவன் மீது
பற்றுவைக்கப் புதுமைப்பெண் விரும்பு வாளா?
கணக்குப்போட் டுக்கூட்டிக் கழித்து வாழக்
கயமைமனம் துணிந்துவிட்டால் நீதி ஏது?

எத்தனையோ பெண்கள்என் கடைக்கண் பார்வைக்கு
ஏங்கிநிதம் கிடக்கையிலும் ஒருத்தி மீதே
பித்தாகிப் பேராசைக் குள்ளே வீழ்ந்தேன்!
பெற்றிருக்கும் பெருமைபுகழ் எல்லாம் அந்தப்

புத்தழகிக் காலடியில் கிடத்தி வைத்துப்
புதுவாழ்வுக் கனவுகண்டேன்! தோற்று விட்டேன்!
முத்தாய்ப்பு வைத்துவிட்டேன் என்வாழ் விற்கே-
முறையாகச் சிந்தித்தே முடிவை ஏற்றேன்!

அப்பனுக்கும் அன்னைக்கும் வயது வந்த
ஆளான தம்மக்கள் திரும ணத்தில்
தப்பாகத் தலையிடற்கோ உரிமை இல்லை!
தத்தமது விருப்பம்போல் துணையைத் தேடி
எப்போதும் இல்லறத்தை அவர் நடத்த
இங்கினிமேல் பிள்ளைகட்கே உரிமை வேண்டும்!
இப்பாரில் மணச்சடங்கில் குழப்பம் செய்யும்
இடைத்தரகர் மடப்போக்கைத் தடுக்க வேண்டும்!

பெண்மகளும் ஆண்மகனும் அச்சம் நீங்கிப்
பெற்றோர்க்குத் தம்விருப்பைக் கூற வேண்டும்!
கண்கள்நிகர் கணவனையும் மனைவி யையும்
கண்டெடுக்கும் பெரும்பொறுப்போ அவர்க்கே உண்டு!
சண்டாளத் தனங்களினை எதிர்க்க வேண்டும்
சாதிமதம் சொத்துசுகம் சுற்றம் பார்த்து
வன்முறையில் மணம் நடத்தும் கல்நெஞ் சோரே
வருங்காலப் புத்துலகைக் கொல்ல வேண்டாம்!

"ஏய் உன்னைத் தான் இங்கே வாவா" என்றே
இனியவளை உரிமையுடன் அழைப்பதற்கும்
சேய்அவளை "ஓ...மண்டே அசடே" என்று
சீற்றமுடன் கொஞ்சலுடன் உரைப்ப தற்கும்
வாய்மணக்க "என்கண்ணே! பொன்னே" என்று
வாரியணைத்தே முத்த மிடுவ தற்கும்
வாய்ப்புவரும் என்றிருந்தேன்; தோல்வி தேடி
வந்தபின்பும் நானிங்கே வாழ லாமா?

நம்மோடு நேற்றிருந்தோர் இன்றோ இந்த
நிலத்திற்கும் நெருப்பிற்கும் சொந்த மாகித்
தும்மிமுடிப் பதற்குள்ளே மறைந்து போகும்
துயர்வாழ்வுத் தொழில்உலகை நினைக்கும்போதோ
அம்மம்மா! தலைசுற்றும் வெறுப்புப் பூக்கும்!
அடிமைமுறை இவ்வாழ்வில் கூட நாமோ
செம்மையுறத் துலங்குதற்கோ தடைகள் கோடி
சீரழிவுப் போருலகே தொலைந்து போநீ!

கல்லறைமேல், எனையடக்கம் செய்யப்போகும்
கல்லறைமேல் வேறொன்றும் எழுத வேண்டாம்!
"உள்ளத்தை ஒருத்தியிடம் பறிகொ டுத்தே
உறங்கிடுவோன்" என்றுமட்டும் பொறித்தி டுங்கள்!
முல்லைப்பூக் கொடிபடர்ந்து நான்உ றங்கும்
மேட்டின்மேல் மணம்பரப்ப வழிசெய் யுங்கள்!
தொல்லைகளே மலிந்துள்ள உலகை விட்டுத்
தூயவன்நான் போகின்றேன் மகிழ்ச்சி யோடு!

நெஞ்சார வாழ்த்துகின்றேன்! என்நெஞ் சத்தில்
நிரந்தரமாய்க் குடியிருந்து போகின் றாளை!
கொஞ்சங்கூடத்துன்பத் துயர்சூ ழாத
குறைவற்ற பெருவாழ்வில் அவள்வா ழட்டும்!
வஞ்சனையே இல்லாமல் வாழ்த்து கின்றேன்;
வளமெல்லாம் பெற்றந்த மகள்வா ழட்டும்!
கொஞ்சுமொழிக் கணவனுடன் குழந்தைச் செல்வம்
குறையின்றிப் பெற்றந்தக் கிளிவா ழட்டும்!

கிள்ளைமொழி தேன்மனைவி அணைப்பில் வீழ்ந்து
கிறுக்கனைப்போல் அவள்காட்டும் வழியில் வாழ்ந்து
பிள்ளைகளைப் பெற்றெடுத்து, மணம் முடித்துப்
பேரன் பேத்திகள்—மழலை மொழிகள் கேட்டுத்

தள்ளாடித் தள்ளாடித் தலையை ஆட்டித்
தடியூன்றிப் போகாமல்; மனித வாழ்வின்
பள்ளம்மே டுகள் எல்லாம் தாண்டிப் பார்த்த
படுகிழமாய்ச் சாகாமல் போகின் றேன்நான்!

பொன்னாசைக் கனவுகளே கலைந்து போங்கள்!
பொன்னாசைக் கனவுகளே தொலைந்து போங்கள்!
புண்ணாகிப் புண்ணாகிப் போன என்றன்
புனிதமனம் விட்டுவிட்டுப் பறந்து போங்கள்!
மண்ணாகப் போகின்றேன்—நீங்கள் வேறு
மனிதர்களின் மனங்களினைக் கெடுக்கப் போங்கள்!
என்ஆவி பிரியுமுன்பே போய்வி டுங்கள்
இப்போதே கண்மூடு தற்குள் போங்கள்!

எனைவளர்த்த தென்தமிழே! அன்னையே! உன்
இன்னணைப்பை உதறிவிட்டுப் போகின் றேன்நான்!
எனைவளர்த்த தமிழகத்தீர்! நீங்கள் தந்த
ஏற்றமிகு ஆதரவை மறக்க வில்லை!
எனக்கென்றே வாழ்ந்திருந்த தோழன் மாரே!
இதயத்தால் வணங்குகின்றேன்; வருகின் றேன்நான்!
துணையற்ற ஏழைகளே! உங்க ளையே
தொழுதுகவி பாடிவந்தோன் போகின் றேனே!

ஒருமுறையே னும்அவளின் திருமு கத்தை
உயிர்போகும் முன்பார்க்க எனக்கோர் ஆசை!
வருமாஅப் பெருவாய்ப்பு? நடக்கா ஒன்றின்
வரவுக்கே ஏங்குவதோ மடமைப் போக்கு?
திருமணக்கோ லத்திலவள் முத்து வோடு
தெய்வப்பெண் ணாய் நாளை திகழப் போகும்
திருக்காட்சி யைக்காணும் வாய்ப்பைக் கூடத்
திருநெல்வே லியின்மங்கை மறுத்துவிட்டாள்!

அவள்மீதோ எனக்கேதும் வருத்தம் இல்லை
அவள்மீதோ எனக்கேதும் வெறுப்பே இல்லை!
தவறெல்லாம் பழம்போக்கில் புரளு கின்ற
தற்குறியர் சமுதாயக் கிறுக்கர் மீதே!
கவலைகளே இந்நாட்டில் முளைப்ப[து] அந்தக்
கயவர்களின் கண்மூடிச் சட்டத் தால்தான்!
புவிமீது கவிழ்ந்துள்ள மடமைப் போக்கைப்
புதைப்பதுவே இனி இளைஞர் கடமை என்பேன்!

பனிக்காலக் குளிர்நீரில் குளிக்கும் போது
பல்நடுங்கும் உடல்நடுங்கும் உயிர்ந டுங்கும்!
இனியோரே! அம்முறையில் நடுங்கும் என்றன்
இதயத்தால், இம்மடலை முடிக்கின் றேனே!
கணக்கில்லாத் தொண்டுகளை இந்நாட்டிற்குக்
கவிஞன்நான் செய்வதற்குக் கனவு கண்டேன்!
மணக்கட்டும் தமிழ்–தமிழர் புகழ்இவ் வையம்!
மறுமலர்ச்சி பூக்கட்டும் உலகோர் வாழ்வில்!





4

**" பேரன்பே! உங்கட்காய்ப் பிறந்திருக்கும்
பேதைமகள் இதோஇதோ நான் வந்து விட்டேன்!"**

***வி**டிந்தால் அவள் கழுத்தில் மாமன் மகன் முத்து கட்டும் தாலி ஏறிவிடும். அன்று மாலை வந்த செய்தித்தாளின் செய்தி அவள் கண்களையும் மனக் கண்களையும் கண்ணீர் மழை பொழிய வைக்கின்றது. அவள் பிரிவைத் தாங்கிக்கொள்ள முடியாமல், தூக்க மருந்துண்டு நெடும்பயணம் போக முடிவெடுத்த மக்கள் கவிஞன் பண்ணரசன் மருந்துவ மனையில் சேர்க்கப்பட்ட செய்தி அவளைத் திகைக்க வைப்பதுடன், திசைமாறிப் போகவும் வழிவகுக்கிறது. 'வாழ்ந்தால் அவரோடுதான் வாழ்வேன்' என்ற முடிவோடு உறவோர், ஊரார் கண்களில் மாறுவேட மண்தூவி, ஓடோடி வருகின்றாள் சென்னைக்கு. அவளின் வருகையால், அவன் உயிர்ப்பறவை சிறகு விரிக்கின்றது. இரண்டு உள்ளங்களின் உறவு கைகோத்துக் கொள்கின்றன.*

ஓடோடி வருகின்றாள்; தன்னை எண்ணி
உயிர்மாய்க்கத் துணிந்தவனின் முகத்தைக் காண!
ஓடோடி வருகின்றாள்; தூய காதல்
உயிர்வாழ உயிர்கொடுத்தான் உயிரைக் காக்க!
ஓடோடி வருகின்றாள்; சொல்ல வொண்ணா
ஓலிவேக மனத்தோடு துடிப்பி னோடு!
ஓடோடி..ஓடோடி..வருகின் றாளே
உண்ணாமல் உறங்காமல் அன்பு மங்கை!

“இன்றிரவு கழிந்துவிட்டால் நாளைக் காலை
ஏறிவிடும் இவள்கழுத்தில் தாலி; அந்த
நன்றான காளைமகன்முத்து கொஞ்சும்
நாயகியாய் மாறிடுவாள் நம் – பெண்” என்ற
குன்றாத பேராசை பெற்றோர் ஆசை
கொன்றுவிட்டுக் கிளம்பிவிட்டாள் மணம கள்தான்!
“ஒன்றிடுவேன் பண்ணரச னோடே” என்ற
உறுதியுடன் கிளம்பிவிட்டாள் பொன்ம லர்தான்!

மாலைவந்த செய்தித்தாள் ஒன்றில் வந்த
மனங்கலங்கும் அதிர்ச்சிதரும் செய்தி கண்டு
கோலமயில் தன்னுணர்வை இழந்து விட்டாள்!
கொட்டுமழை போல்கண்ணீர் கொட்டி நின்றாள்!
மூலையிலே தனியறையில் விளக்க ணைத்து
முகம்பொத்தி விம்மிவிம்மி அழுதுத் தீர்த்தாள்!
“காலைவந்தால் தன்வாழ்வோ மற்றோர் ஆள்கைக்
கட்டுக்குள் முடங்கிவிடும்” என்றே சாய்ந்தாள்!

திகைப்பூண்டுச் செடிமிதித்தார் போலே இந்தத்
தேன்மலராள் திக்குதிசை புரிந்தி டாது
நகைத்திட்டாள் தனக்குள்ளே! “இப்போ தேநான்
நல்லதொரு முடிவான முடிவெ டுப்பேன்

பகைஎதிர்ப்பேன்! எவர்பகைக்கும் அஞ்சா தென்றன்
பண்ணரசர் வாழ்வோடு வாழ்வேன்" என்றே
புகைவண்டி யில்–சென்னை போக மங்கை
புனைந்திட்டாள் ஆண்வேடம்; பயண மானாள்!

ஊருலகின் நகைப்பிற்கும் ஏச லுக்கும்
உற்றார்பெற் றார்தூற்றும் தூற்ற லுக்கும்
தூரெடுக்கா உள்ளங்கள் மிரட்ட லுக்கும்
துடிதுடித்தே அஞ்சியஞ்சி வாழ்ந்து வந்தாள்
கூர்வேலாய் மாறிவிட்டாள்; கொடுமை மாய்க்கும்
கொடுவாளாய் உருப்பெற்று விட்டாள்; அந்தோ!
சீறுகின்ற கொடும்புலியாய்க் கிளம்பி விட்டாள்
சீரழிக்குங் கடும்புயலாய்ப் பயண மானாள்!

"வான்பறவை போல்எனக்குச் சிறகு மட்டும்
வளர்ந்திருந்தால் நொடிப்பொழுதில் பாய்ந்து சென்று
நான் இந்நேரம் – சென்னை சேர்ந்தி ருப்பேன்!
நடுங்குமுயிர் பண்ணரசர் பொன்மு கத்தை
ஏன்–என்றன் இருகரங்கள் அணைப்பிற் குள்ளே
இருத்திஅவர் உயிர்காக்க முனைந்தி ருப்பேன்!
நான்பாவி நான்பாவி" என்ற ரற்றி
நடுநடுங்கி வண்டிக்குள் சுருண்டி ருந்தாள்!

"இந்நேரம் இந்நேரம் பேதை என்னால்
இனியஉயிர் மாய்ப்பதற்குத் துணிந்த மன்னர்
இன்னுயிரின் வேர்காக்க மருத்து வர்கள்
எடுத்திட்ட முயற்சிகளோ வென்றி ருந்தால்
என்னாவி என்னுடலில் தங்கும்; இல்லை
எடுத்தெறிந்து விடுவேன்என் உயிரை; நீரில்
மண்பொம்மை கரைதல் போல் கரைவேன்" என்று
மருண்டவிழி மணிமுகத்தாள் அரற்று கின்றாள்!

இரவுவந்தும் இமைமூட வில்லை! அந்த
இரண்டாவது வகுப்புப் பெட்டிக் குள்ளே
உறங்குகின்ற மனிதர்களைப் பார்த்தும் மங்கை
உறங்கவில்லை; கண்ணீரின் ஊற்றோ ஆறாய்த்
திறக்காத மார்பகத்தி னூடே ஓட
தேம்பாமல் அழுதழுது வீங்கும் கண்கள்
சிரங்காகிப் புண்ணாகிச் சிவந்தி ருக்கச்
செம்மைமொழி பொன்மலரோ துவண்டி ருந்தாள்!

"எப்போது சென்னைவரும்" என்று நங்கை
எட்டிஎட்டிப் பார்க்கின்றாள்; "விரைந்து சென்றே
எப்போது அவர்முகத்தைப் பார்ப்பேன்" என்றே
எண்ணிஎண்ணி நைகின்றாள்; "என்றன் ஆவி
தப்பாது அவர்போனால்; பிழைத்து விட்டால்
தமிழிணைந்த சுவைபோலே இணைந்து வாழ்வோம்!
எப்போதும் அறப்பணியே புரிந்தி ருப்போம்"
என்றெண்ணி என்றெண்ணிக் குழம்பு கின்றாள்!

"அவருக்காய்ப் பிறந்தவள் நான்; எனவே, என்னை
அவருக்கே ஒப்படைத்தல் நீதி யாகும்!
அவருக்காய் மலர்ந்தவள் நான்; எனவே, என்னை
அவர்மடியில் கிடத்துவதே சட்ட மாகும்!
அவரின்றி நானில்லை! நானிங் கின்றி
அவரில்லை என்பதனைப் புரிந்து கொண்டேன்!
சுவரின்றிச் சித்திரமும் தீட்ட லாமோ?
சொல்லுங்கள்" எனத்தனக்குள் முனகு கின்றாள்!

தொண்டைவழி யில் ரப்பர் குழாய்ச்செ லுத்தித்
தூய்மைப்படுத் திக்–குடலை, காற்றுத் தந்து
மண்டைக்குள் நினைவிழந்த அன்ப னுக்கு
★"மிஜிமைடு" "பெமிகிரைடு" ஊசி போட்டே

உண்டாக்கப் புத்துயிரைப் பாடு பட்டே
உறங்காமல் செயல்பட்ட மருத்து வர்கள்
கண்டுகளித்தார் கவிஞன் விழித்தி றப்பை!
கனிக்கவிஞன் உயிர்மூச்சின் மறுபி றப்பை!

பிழைத்துவிட்டான் நம்கவிஞன்! பேத லித்துப்
பறந்துவரும் பொன்மலரின் கரங்கள் பற்றப்
பிழைத்துவிட்டான் நம்கவிஞன்! 'வாழ்வோ தாழ்வோ
பிணைந்திடுவேன் அவரோடே' எனத்து ணிந்த
பிழையறியா மென்மகளின் உள்ளம் வாழப்
பிழைத்துவிட்டான் நம்கவிஞன்! குருட்டுப் போக்குப்
பழம்பாட்டுத் தமிழர்க்குப் புதிய இன்பப்
பாற்கவிதை படைப்பதற்கே பிழைத்து விட்டான்!

தெளிந்திருந்தும் கல்விழுந்த தால்க லங்கித்
தெளிவற்ற குளத்துநீர்ப் பரப்பைப் போன்று
தெளிந்திருந்தான் தெளிவற்றுப் போனான்; மீண்டும்
தெளிவுக்கு வந்துவிட்டான்; மெல்ல மெல்லக்
களிப்புலகைக் கவலைசேர் உலகைக் காணக்
கண்களினைத் திறந்திட்டான்; கோல மாவைத்
தெளித்ததுபோல் பொன்மலரின் நினைவு வந்து
திரைவிலக்க அரும்பாகி மலர்ச்சி பெற்றான்!

"பொன்மலர்என் பொன்மலராள் எங்கே" என்று
புலம்புகின்றான் பணணரசன்; "ஐயோ! ஐயோ!
பொன்மலர்என் பொன்மலரைப் பறிக்கத் திட்டம்
போடாதீர்" எனக்குழறிக் கூவு கின்றான்!
கண்களினில் தெளிவின்றி மிரட்சி யோடு
கவலையுடன் நிற்போரைக் காணு கின்றான்!
"என்வாழ்வுப் பெருநிதியே! எங்கே உள்ளாய்?"
என்றரற்றிப் படுக்கைமேல் புரளு கின்றான்!

பாய்ந்தோடிப் பாய்ந்தோடிப் பலஊர் தாண்டிப்
பறந்தோடி வருகின்ற புகைநீள் வண்டி
காய்ந்தமனம் உடையோரே மிகுதி யாகக்
கடைவிரித்து வாழ்கின்ற சென்னை வந்து
ஓய்ந்தறியா எழும்பூரின் நிலையம் காலை
ஒதுங்கியது; பொன்மலர் ஆண் உடைக ளைந்து
பாய்ந்தோடும் விசைஊர்தி அமர்த்தி; அன்பன்
படுத்திருக்கும் நோய்தீர்க்கும் இல்லம் சேர்ந்தாள்!

"அம்மா...ஓ...ஐயோ...ஆ...ஊஊ" என்ற
அழுகுரல்கள் சுழன்றிருக்கும் அவலம் தோய்ந்த
செம்மையிலா நோய்மனிதர் நிறைந்தி ருக்கும்
ஸ்டேன்லிமருத் துவமனையில் அங்கு மிங்கும்
கும்மியடிக் கும்மங்கை சுழல்தல் போன்று
குறுக்கும்நெடுக் கும்ஓடி இறுதி யாகப்
பொம்மைபோல் படுக்கைமேல் படுத்தி ருந்த
பண்ணரசை பூம்பாவை கண்டு கொண்டாள்!

கரையுடைத்துக் கட்டுக்கு மீறிப் பாயும்
காட்டாற்று வெள்ளம்போல் உள்ளுக் குள்ளே
வரம்பின்றி நிறைந்திருந்த பாசம் பொங்கி
வழிந்ததனால் தனைமறந்து; சுற்றி நின்று
வருந்துகின்ற மனிதர்களை மறந்து, மங்கை
"வந்துவிட்டேன் வந்துவிட்டேன் அத்தான்; கொஞ்சம்
திறந்திடுங்கள் ஒளிவிழியை" என்று கெஞ்சி
தேன்கவிஞன் மார்பின்மேல் முகம்பு தைத்தாள்!

"பேரன்பே உங்கட்காய்ப் பிறந்தி ருக்கும்
பேதைமகள் இதோ இதோ நான் வந்து விட்டேன்1
ஊரன்பை உறவன்பை உதறி விட்டே
உங்களன்பையே நம்பி வந்து விட்டேன்!

பாருங்கள் பாவலரே என் முகத்தைப்
பாவிமகள் வந்துவிட்டேன்” என்று கூவித்
தேர்மார்பன் பண்ணரசன் முடியை நீவித்
திரள்கன்னம் வருடுகின்றாள் குழந்தை நெஞ்சாள்!

கனவுக்குள் கனவுக்குள் கனவுக் குள்ளே
கண்புதைத்துச் சோர்ந்துபடுத் துறங்கும் அன்பன்
இனியதொரு குரல்கேட்டுக் கண்மலர்ந்தான்!
எதிரில்தன் உயிர்க்கனவு நனவாய் மாறிப்
பனிப்புகைக்குள் தெரிவதுபோல் நின்ற மங்கை
பொன்மலரை அடையாளம் கண்டு கொண்டான்!
தனைமறந்தான்; அப்படியே பாய்ந்து தாவித்
தழுவுகின்றான் பெருநிதியை மார்பில் வைத்தே!

ஏங்கிக்கொண் டிருந்திட்ட இரண்டுள் ளங்கள்
இணைந்ததனால் பெருமகிழ்ச்சி முளைத்த தங்கே!
தீங்கறியாக் காதலரைப் பிரிக்கச் சூழ்ச்சித்
திட்டங்கள் போடுவோர்க்குத் தோல்வி அங்கே!
மாங்குயிலாள் அணைப்பிலவன்! மறவன் கைக்குள்
மலர்மங்கை! அக்காட்சி இனிய காட்சி!
தேங்கியது பேரின்பம் ஆ...ஆ! காணும்
திசையெல்லாம் காதலர்க்குச் சொர்க்க மாகும்!






**"சென்னைக்குப் புறப்படுவோம்; இன்ப ஊர்தி**
**செப்பனிட்டு வைத்திடுங்கள்; என்றன் அன்புக்**
**கண்மணியாள் நல்வாழ்வே நமது வாழ்வாம்**
**காதலரைச் சேர்த்துவைப்போம்; பிரித்தல் தீது!"**

*மணமகளைக் காணாமல் மணவீடு பேரமளியில் ஆழ்ந்து விடுகின்றது. மறைவாகப் பல கதைகள் பேசப்படுகின்றன. மணமகளின் தந்தை, தாய், மணமகன் முத்து - போன்றாரின் துயருக்கும் துடிப்புக்கும் ஒரு முடிவைத் தருகின்றது-புறப்படுமுன் பொன்மலர் எழுதிய மடல். பெற்றோர் மகிழ்ச்சியில் மிதக்கின்றனர். காதலரைச் சேர்த்து வைக்கச் சென்னை புறப்படுகின்றனர், மணமகன் முத்துவுடன்.*

மணவீட்டில் பேரமளி; முணுமு ணுப்பு!
மாமன்மச் சான் – அண்ணன் தங்கை தம்பி
தொணதொணக்கும் படுகிழங்கள் பாட்டன் பாட்டி
தொலைதூர உறவினர்கள் எல்லாம் ஆங்கே
மணப்பெண்ணை ஓயுமட்டும் தேடி னார்கள்!
றைவாகப் பலகதைகள் பேசி னார்கள்!
ணகணக்கும் பள்ளிமணி ஓசை போன்று
கற்பனைப்பேச்சில் வீடு கலந்த தம்மா!

சாயர்புரம், குமாரபுரம், கண்ண நல்லூர்,
சாத்தான்குளம், குமாரகிரி, ஆறாம் பண்ணை
தூயபண்பு நாசரத்தூர்; நாணல் காடு,
துவளாத நாங்குனேரி, மீள விட்டான்
தேயாத புகழுடைய பழைய காயல்,
திறன்மிகுந்த பழங்கோட்டை போன்ற ஊரார்
வாயாடிக் கிடந்தார்கள்; விருந்தை உண்ண
வந்திருந்த உறவினரோ அழுதார் ஆங்கே!

'என்மகளே! பெற்றவளின் வயிறு தீய
எங்கேநீ போனாயோ; செல்வப் பூவே!
பொன்மலரே! என்கருப்பை தன்னில் பூத்த
புதுப்பூவே! உன் விருப்பம் மறைவில் லாமல்
என்னிடத்தில் உரைத்திருந்தால் அவ்விருப்பம்
இனிதுநடை பெறவழிகள் வகுத்தி ருப்போம்!
உன்வாழ்வே எம்வாழ்வாம் அம்மா" என்றே
உரைத்தழுதார் அன்னம்மை பொன்ம லர்தாய்!

கன்னத்தில் கைவைத்துப் பூகம் பத்தில்
கருகியதோர் நகரம்போல் இடிந்து சோர்ந்தே
என்னத்தைச்செய்வதெனப் புரியா வண்ணம்
ஏமாற்றத் தில்மூழ்கிக் கிடந்த தந்தை;

அன்புருவ அறச்செல்வர் பண்பின் மேலோர்
அன்புநாய கம்தேம்பி அழுதார்; "என்றன்
பொன்மலரே! குலக்கொழுந்தே! அமைதிச் செல்வி
போனதெங்கே கண்மணிநீ!" என்றி ரைந்தார்!

"மடிமீதும் தோள்மீதும் மார்பின் மீதும்
மலர்மகளே உனைக்கிடத்தி வளர்த்தேன்; பட்டப்
படிப்புவரை படிக்கவைத்தும் களித்தேன்; என்றன்
பரம்பரைக்கே ஒருபெண்நீ! இனிமைப் பண்நீ!
வடிவழகே உன்விருப்பப் படிந டந்தேன்;
வைத்தகுறை என்னம்மா?" என்ற ரற்றித்
துடிதுடித்துச் சுவர், தூணில் தலையி டித்துத்
தூயமனப் பேராளர் கதறி வீழ்ந்தார்!

"தப்பறியாச் சிறுமலராய்ப் பாவா டைக்குள்
தமிழ்பேசி நீதிரிந்து வளர்ந்த போதோ
'இப்போதே நகைபோட வேண்டும்; அப்பா
என்காதில் துளைபோ'டென் (று) அடம்பி டித்தாய்!
அப்பப்பா! நச்சரிப்பால் தட்டான் வந்தே
அணிகாதைக் குத்திவிட்டான்; அழவே இல்லை!
அப்போதே அவன்சொன்னான்: 'பிடிவா தப்பெண்
அன்பரசி இவள்' என்று; சரியாய்ப் போச்சே!"

என்றழுது, மாணிக்க வாச கர்தம்
இனியதிரு வாசகத்தால் உருகி னாற்போல்
குன்றுமன அன்புநா யகமோ, ஆங்கே
குமுறிக்கொண்டிருக்கின்ற நேரம்; ஓர்ஆள்
"பொன்மலரின் மடல்இதோபார்" என்று கூறிப்
புதுத்திருப்பம் செய்திட்டார்: தடுமாற் றத்தால்
கண்மயங்கிக் கிடந்தாரின் கண்கள் எல்லாம்
காகிதத்தின் மேல்பதியப் படித்தார் தந்தை!

"அன்னைக்கும் தந்தைக்கும் வணங்கு கின்றேன்!
அருள்கூர்ந்து பிழைபொறுத்துக் கொள்ள வேண்டும்.
சென்னையில்நான்பணியாற்றும் போது; நைந்த
செந்தமிழ்க்கும் தமிழர்க்கும் உழைக்கும் அன்பர்
பண்ணரசர் புகழ்க் கவிஞர் இடத்தில் என்றன்
பாழ்மனத்தைப் பறிகொடுத்தேன்; என்அக் கத்தால்
தன்னுயிரைத் தரத்துணிந்த அவரைக் காக்கத்
தலைநகரம் செல்கின்றேன்; வருந்த வேண்டாம்!

"வாழ்வதெனில் அவரோடே வாழ்வ தென்றே
வரம்பொன்றை எனக்குள்ளே வகுத்துக் கொண்டேன்;
பாழ்சமுதா யப்போக்கில் போகும் உங்கள்
பழம்போக்கு மனப்போக்கில் போவ தற்கே
ஆழ்ந்தறிந்து செயல்பட்டேன்; முடிய வில்லை!
அவர் தூய அன்படிமை இனிநான்; நாமோ
வாழ்ந்தால்தான் துதிபாடும் சுற்றத் திற்காய்
வாழ்வதெனில் வருங்காலம் வறண்டு போகும்!"

பொன்மலரின் மடல்படித்த தந்தை, மீட்சிப்
பூரிப்பில் புன்னகைப்பில் கலந்து விட்டார்!
"என்னம்மா ! என் தாயே! முன்பே உன்றன்
எண்ணத்தை உரைத்திருந்தால் உன்போக் கில்நான்
கண்மூடிப் பழக்கங்கட் (கு) ஆட்படாது
கவிஞர்க்கே மணம்முடித்து வைத்தி ருப்பேன்!
பண்ணரசர் பிழைத்திடுவார்; கண்ணே உன்னைப்
பாவலர்க்கே மகிழ்வோடு கொடுப்பேன்" என்றார்!

"சென்னைக்குப் புறப்படுவோம்; இன்ப ஊர்தி
செப்பனிட்டு வைத்திடுங்கள்; என்றன் அன்புக்
கண்மணியாள் நல்வாழ்வே நமது வாழ்வு!
காதலரைச் சேர்த்துவைப்போம்; பிரித்தல் தீது!

பொன்மலரும் பாவலரும் கூடி வாழும்
புதுவாழ்வைக் கண்டிடட்டும் நமது கண்கள்!
கண்ணப்பா! தங்கமணி! பறக்க வேண்டும்
காரெடுத்து வாருங்கள்" என்றார் அன்பர்!

கலகலப்பில் புதுத்தெம்பில் மீண்டும் அந்தக்
கல்யாண வீட்டாரோ ஆழ்ந்து விட்டார்!
கலகலத்துக் கட்டுக்கோப் பற்ற வீடாய்க்
கவிழ்ந்தமுகம் கவிழ்ந்தவுளத் தோடு வாடி
நிலைகுலைந்த மாப்பிள்ளை முத்து, வந்த
நெஞ்சுருக்கும் மங்கைமடல் செய்தி கேட்டுப்
புலர்ச்சிபெற்றான்! தாங்கவொணா மகிழ்ச்சிக்குள்ளே
போய்ப்புதைந்தான்; புதுமையிதாம் அங்குள்ளோர்க்கு!

"பண்ணிசைக்கும் குயிலாக நித்தம் இங்கே
பாட்டாளர் வாழ்விற்கே பாடும் தோழர்
பண்ணரசர் தேன்கவிதைச் சுவைஞன் நான்—ஆம்!
பாவலரும் பைங்கிளியும் மனத்தால் தோய்ந்த
இன்செய்தி முன்பேநான் அறிந்தி ருந்தால்
எளியேனும் அவர்கட்குத் துணையாய் நிற்பேன்!
பொன்கோடி கொடுத்தாலும் கிடைக்கா அந்தப்
புதுக்கவிஞர் வாழ்வேநம் நாட்டின் வாழ்வு!

இப்போதும் குடிமுழுகிப் போக வில்லை
என் மாமா! ஓ...அத்தை! புறப்படுங்கள்;
தப்பேதும் இழைக்கா அக் கள்ள மில்லாத்
தண்நெஞ்சக் காதலரை வாழ வைப்போம்!
கப்புமிருள் பழம்போக்கிற் கஞ்ச வேண்டாம்!
கறைமனத்துச் சமுதாய முகத்தில் காறித்
துப்பிடுவோம்; இணைந்தாரைச் சேர்த்து வைப்போம்;
துடித்தெழுங்கள்" என்றார் நம் பழம்மாப் பிள்ளை!




**"விண்வான வில்நிறமாய்க் காதற் காட்சி**
**விதம்விதமாய் விளைந்ததங்கே காணாக் காட்சி!"**

*ஏங்கிய இரண்டுள்ளங்களுக்கும் இடையில் இருந்த பிரிவு விலகிக் கொண்டதால், மருத்துவமனை காதல் மணக்கும் மனையாகி விட்டது. கொஞ்சிக் கிடக்கும் அந்த இளங்குருத்துகள் எத்தனையோ வித இன்பக் கனவில் மிதக்கின்றன.*

பண்ணரசர் பக்கத்தில் அமர்ந்து மங்கை
பணிவிடைகள் செய்திருந்தாள்; வேளா வேளை
சொன்னபடி உணவூட்டி மருந்து தந்தாள்!
சொக்கிப்போய் நெறிவழுவாள் காப்பிற் குள்ளே
கண்மயங்கிக் கிடந்திட்டான் கண்களோடு
கலைமகளின் புன்னகையும் கலக்கும் போது—
விண்வான வில் நிறமாய்க் காதற் காட்சி
விதம்விதமாய் விளைந்ததங்கே; காணாக் காட்சி!

“அச்சச்சோ அங்கேபார்” என்று கூறி
அவள்பார்வை வேறுபக்கம் திருப்பி விட்டே
‘இச்’ சென்றே ஒருமுத்தம் வைப்பான்; அந்த
இளங்குழந்தைப் பட்டுக்கன் னத்தின் மீது!
நச்சுக்கண் மனிதர்களோ பார்க்கா நேரம்
நறுமலராள் கரம்பற்றி மணம்நு கர்ந்து
கச்சுக்குள் கட்டுண்ட ஒன்றை எண்ணிக்
“கண்ணே பால் வேண்டுமென்பான்” சிரித்துக்கொண்டே!

“பழச்சாற்றை அருந்துங்கள்” என்றே பாவை
பாட்டிசைக்கும் பாவலன்பால் கேட்கும்போது,
“பிழியாத உன்சிவந்த இதழ்ப் பழத்தில்
பிழிந்தெடுத்த சாறேநான் உண்பேன்; கண்ணே
வழிவிடுவாய்; தடுக்காதே” என்பான் தோழன்!
வரும்போகும் மருத்துவப்பெண் கூட்டத்தார்க்கும்
விழியுண்டாம் என்பதையே மறந்து விட்டு
விளையாடிக் கொண்டிருப்பான் குழந்தை போல!

“போங்களத்தான் நீங்ளொரு குறும்புக் காரர்
பொல்லாத செயல்புரிந்தால் அழுவேன்; ஊம்...ஊம்...
தூங்காமல் நமைச்சுற்றி விழித்திருக்கும்
துருதுருத்த கண்களுண்டே! எச்சரிக்கை!

தூங்குங்கள் உடல்தேற வேண்டும்; உங்கள்
தோகைமயில் வேறெங்கும் போகா'' தென்றே
சீங்குழலாள் பண்ணரசன் மோவாய் நீவிச்
சிணுங்குவதும் கொஞ்சுவதும் குடும்பக் காட்சி!

"உயிர்கூட்டில் உனைவைத்து வளர்த்த பெற்றோர்
உன்பிரிவால் கண்கலங்கிக் கதறி வீழ்ந்தே
உயிர்வாதை படுவாரே தேவி'' என்பான்!
"உறவெல்லாம் இன்றுவரும் நாளைபோகும்
உயிர் நீங்கள் உங்களுயிர் கலங்கும் போதோ
உறவெனக்கும் ஒருகேடா?'' என்பாள்; நன்செய்ப்
பயிர்முகமாய் முகங்காட்டித் தெம்பை ஊட்டும்
பாவலனின் வாழ்வரசி - கற்புத் தேவி!

"என்மீதும் நம்பிக்கை வைக்கா உள்ளம்
என் உள்ளம்; ஆம்..கண்ணே! ஆனால், நானோ
உன்மீதே நம்பிக்கை வைத்தேன்; என்றன்
உடலுயிரை உன்னிடமே ஒப்ப டைத்தேன்!
பெண்மைக்கே இலக்கணம்நீ; இந்த ஏழைப்
புலவனுக்குக் கிடைத்தபெரும் புதைய லேநீ!
நன்மகளே!அருகில்வா" என்னும் நேரம்
நற்செய்தி யோடாங்கே தாதி வந்தாள்!

"நாளைக்கே வீட்டிற்குப் போக லாமாம்!
நலம்பெற்று விட்டீராம்; அய்யா சொன்னார்!
வேளைக்குச் சத்துணவே உண்டு வந்தால்
வெலவெலப்பும் உடல் இளைப்பும் தீரும்! இந்தக்
கோலமயில் தோள்தொத்தும் மணநாள் அன்று
குடும்பத்தோ டே வருவேன்—அழைப்புத் தந்தால்!
தாலேலோ பாடும்நாள் வரட்டும்; நீங்கள்
தளிர்க்குழந்தை ஏந்தும்நாள் வரட்டும்" என்றாள்!

நாணத்தில் இரண்டுயிரும் நனைந்த நேரம்
நண்பர்களும் வந்தார்கள்; "வீடு பார்த்தே
ஆனதெல்லாம் செய்துள்ளோம் – கவிஞு ரேறே
அடுத்தபடி என்னசெய்ய!" என்றிட் டார்கள்!
கோணலிலா நெஞ்சுடைய அன்பர் பல்லோர்
குடும்பஉற வோடாங்கே நெருங்கி வந்து
"தேன்கவிஞு! திருமணத்திற் கான தெல்லாம்
செய்துள்ளோம் அஞ்சற்க வெற்றி" என்றார்!

சென்னையிலே பாவலனின் புதுவாழ் விற்குச்
சீராகச் செயல்களெலாம் நடக்கும் போதோ
அன்புநாயகம் நெல்லை நகரை விட்டே
அவர்உறவோர் சிலரோடும் முத்து வோடும்
இன்பஊர்தி யில்பாய்ந்து வரும்அவ் வேகம்
இயம்பவொணாப் பெருவேகம்; மகள்மு கத்தைக்
கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்
கருணைமனத் திற்குவமை தேடு கின்றேன்!






**"சதிகார உலகமிந்த உலகம்; கோடி**
**சதிராடும் உலகம்; பாழ் உலகம் அம்மா !"**

*உடல் நலமும் மனநலமும் தேறிய பண்ணரசனும் பொன்மலரும் மருத்துவமனையிலிருந்து புது வாழ்வைத் தொடங்கப் புறப்படுகின்றனர். காதலரின் நல்வாழ்வை நாடி மருத்துவமனை தேடிவரும் பெற்றோரைக் கண்ட பொன்மலர், திரண்டுவரும் இன்பத்தைத் தீய்க்க வருகின்றனர் என்ற பேரதிர்ச்சி தாக்க மயங்கி விழுகின்றாள் - மறுபடியும் குழப்பமாங்கே.*

புகைச்சுருட்டால் பழுத்துவிட்ட கிழவன் மீசை
போல், பழுத்த உணர்வுகளே முகத்தில் தேங்கத்
தொகைதொகையாய்ப் பலநூறு ஆசைக்குள்ளே
துவைந்திருந்த அன்புநாய கத்தின் நெஞ்சம்
வகையோடு மகள்மணத்தை நடத்து தற்கு
வரைபடங்கள் தீட்டிக்கொண் டிருக்க; ஊர்தி
பகையுணர்வே பலர் மூச்சாய்க் கொண்ட சென்னைப்
பட்டினத்தை வந்தடைந்த நேரம்—காலை!

இப்படியும் அப்படியும் ஊச லாடா
இதயத்தோ டோடிவரும் அன்புத் தந்தை,
"எப்படியும் நல்லபடி நடந்தால் போதும்
எச்சாதி எம்மதமாய் இருந்தால் என்ன?
தப்புதண்டா வழிபோகாப் பையன் என்றால்
தாரான மாய்முடிச்சுப் போட லாமே!
முப்பழச்சா றாம் தமிழில் மூழ்கும் பிள்ளை
முழுப்பொருத்தம் என்மகளில் மூழ்கல்" என்றார்!

திருமணத்தைச் சென்னையிலா திருநெல் வேலித்
திருநகரிலா மாமா நடத்தல்" என்றே
ஒருமாசும் அறியாநம் உயர்ந்த பண்போன்
உத்தமனாம் நல்முத்து கேட்க லானான்!
மருமகனை என்மகளைக் கலந்த பின்பே
மணம் எங்கே எப்போது? என்ப தெல்லாம்!
அறிவுலகம் போகின்ற போக்கில்; அந்த
அடிச்சுவட்டில் நாம்நடத்தல் நன்றாம்" என்றார்!

"பதிவுமுறைத் திருமணமா? இல்லை, அந்தப்
பழமைமுறைத் திருமணமா? மாமா" என்றான்
புதியஒரு சமுதாய இயக்கத் துள்ளே
போவதற்கு முனைந்தவரைப் பார்த்துத் தோழன்!

பதிவுமுறைத் திருமணம்தான்; வேண்டு மானால்
பாராட்டு விருந்துவிழா ஒன்றை வைத்துக்
குதிபோட்டுக் கொண்டிருக்கும் கிளிகள் இன்பக்
குடித்தனத்தை நடத்தவழி திறப்போம்!” என்றார்.

ன்னங்க—மாப்பிள்ளை தந்தை தாயே
தைமறுத்தால் என்செய்ய?நம்மைச் சுற்றித்
தின்பதற்கும், முழுமொட்டை அடிப்ப தற்கும்
திரண்டுள்ள உறவினரோ உதட்டைத் தூக்கிக்
கண்ணாலே ஏளனங்கள் பேசு வாரே!
கதைகதையாய் ஊரெங்கும் பரப்பு வாரே!
இன்னுயிரைத் தாக்கும் இச் செயலுக் கெல்லாம்
என்செய்வோம்” என்றார்நம் பொன்ம லர் தாய்!

“எவன் தயவை நம்பிநாம் வாழு கின்றோம்?
என்னுழைப்பால் நானுயர்ந்தேன்! அன்றும் இன்றும்
எவன்நிழலி லும்தங்க நினைத்த துண்டா?
எவன்சொத்திற் கும்ஆசைப் பட்ட துண்டா?
எவனிடமும் கால்காசுத் துட்டிற் கும் நான்
இன்றுவரை கையேந்தி நின்ற துண்டா?
எவன்வந்தால் என்ன போனால் தான் என்ன?
என்செல்வி வாழ்விற்கே வாழ்வேன்” என்றார்!

நானூறு கல்தொலைவைக் கடந்து வந்த
நல்லறிஞர் அன்புநா யகமோ; பாயா
தேனூற்றுப் பொன்மலரை உச்சி மோந்து
தேற்றுதற்கும்; அவளுயிரில் காக்கும் அந்தப்
பாநூறு நொடிப்பொழுதில் வடிக்கும் தோழர்
பண்ணரசர் திருநெஞ்சைத் தழுவு தற்கும்
வானூர்தி போல்இன்ப ஊர்தி மூலம்
வந்தடைந்தார் நோய்க்கூடம் — மகிழ்ச்சி யோடு!

பாவலனும் அவன்குடங்கைக் குள்முடங்கிப்
பசியாற்றிப் பசியாறப் போகும் அந்தக்
காவல்மலர் பொன்மலரும் உயிரைக் காக்கும்
காவலராம் மருத்துவர்க்கும் தாதி கட்கும்
நாவாலும் நெஞ்சாலும் நன்றி கூறி,
நண்பருடன் விடைப்பெற்றுக் கிளம்பும் போது,
தாவிவரும் தாய்தந்தை தம்மைக் கண்டு
தளிர்க்கொடியோ தடுமாறித் தவிக்க லானாள்!

"திரண்டுவரும் பேரின்பம் தீய்ப்ப தற்கே
தேடிவரு கின்றார்என் பெற்றோர்; காய்ந்த
வறண்டநிலம் போலான வாழ்வில் தோன்றும்
வளந்தட்டிப் பறிப்பதற்கே வருகின் றார்கள்!
முரண்பாட்டை உறவேட்டைக் காட்டி; மீண்டும்
முத்துவுக்கே மணம்முடிக்க வருகின் றார்கள்!
இருண்டதொரு வீடாகும் இனிஎன் வாழ்க்கை"
எனஎண்ணிக் கால்நடுங்கக் கலங்க லானாள்!

எதிர்பாராப் பேரதிர்ச்சி மென்மை நெஞ்சை
இடித்ததனால் தலைசுற்ற; தென்ற லாலே
கதிர்சாய்தல் போல் தலையைச் சாய்த்தே அந்தக்
கன்னிமலர் தரைதழுவச் சாய்த்த தம்மா!
புதிர்புரியா அவள் ஆளன் தனது வாழ்வுப்
புன்னகையைப் பாய்ந்தணைத்தே ஏந்திக் கொண்டான்!
சதிகார உலகமிந்த உலகம்! கோடி
சதிராடும் உலகம் பாழ் உலகம் அம்மா!

நோய்நொடியில் இயங்குகின்ற உலகம், இந்த
நுரையுலகம்; அணுத்திரட்சிக் கொள்கைக் குள்ளே
பாய்விரித்துப் படுத்துறங்கும் உலகம்; இந்தப்
பழியுலகம்; முன்பிருந்தே பன்னூ றாண்டாய்

மாய்வதும்பின் மலர்வதும் தன் கொள்கை யாக
மாறாமல் கொண்டியங்கிக் கிடக்கும் எட்டிக்
காய்உலகம்; சாவென்னும் காமு கன்கைக்
கைப்பாவை யாய் ஆடும் கலகக் கூடம்!

பாலைவனப் பயணத்தை முடித்தே ஆற்றுப்
பசுஞ்சோலைப் படுக்கைக்குள் நுழைய: ஈச்ச(ம்)
ஓலைபோல் பறந்தோடி வந்த பெற்றோர்
"ஓ" வென்றே கதறிவிழுந்(து) அலற லானார்!
மாலைமாற்றிக் கொள்வதற்குக் காத்தி ருந்த
மணமகனை மணமகளைத் தழுவிக் கொண்டே
"நாலுமைந்தும் மூன்றெ"ன்னும் குழந்தை போன்று
"நல்மகளே எம்வயிற்றில் பால்ஊற்" றென்றார்!

ஓருணர்வும் அற்றுவிட்ட மரம்போல் ஆன
ஒளிமுகத்தான் வெலவெலத்துத் திகைப்பில் ஆழ்ந்தான்!
சீர்வரிசை தந்தந்தக் கவிஞன் கையில்
செல்வத்தை ஒப்படைக்க வந்த பெற்றோர்
நார்போன்றே ஆலாகப் பறக்க லானார்!
நடந்ததொன்றும் அறியாது சுற்றி நின்றோர்
நீர்தெளித்து, மலர்முகத்தில் காற்று வீசி,
நீலவிழித் திறப்பிற்காய்த் தவங்கி டந்தார்!

தூயதமிழ்க் காதலரோ, அச்ச மின்றித்
தொடர்வதற்கே இல்லறத்தை – தடைகள் கோடி!
தூயமனக் காதலரோ, வரம்பி னோடு
பழகுதற்கும் இந்நாட்டில் நகைப்புக் கோடி!
தூய்மையிலாச் செயல்களைநாம் எதிர்த்தல் நன்றே!
தூய்மையினில் கலந்தாரைப் பிரித்தல் நன்றோ?
தூயஇளங் காதலர்க்குத் தடையாய் நிற்போர்
தோள்முறிப்போம்: தூக்கிலிடச் சட்டம் செய்வோம்!

பிறப்பினிலும் இறப்பினிலும் ஏற்றத் தாழ்வைப்
பெறமுடியாப் பாழ்மனிதன்: வாழும் போது
சிறப்படைய விரும்புவதும்: செல்வம் சேர்த்துச்
செழிப்படைய நினைப்பதும் இயல்பே! ஆனால்,
முறையோடு நெறியோடு இரண்டுள் ளத்தில்
முகிழ்க்கின்ற காதலர்க்குள் பேதம் பார்த்துக்
கறைமனத்தால் நிறைகுறைகள் காட்டிக்; கட்டுக்
காவலுக்குள் சிறைவைத்தல் நீதி யாமோ?

பொன் மலரை பண்ணரசைப் போன்றே நாட்டில்
புதுவாழ்வைக் காண்பதற்குத் துடித்தே ஏங்கும்
எண்ணரிய காதலர்கள் அஞ்சி அஞ்சி
இன்றைக்கும் நொடிக்குநொடி சாகின் றாரே!
கண்ணீரின் குளமாகக் காதற் சோலை
காட்சிதர வைக்கும்ஓர் நாடும் நாடா?
தண்ணீரின் வேட்கையினால் தவிப்போர் தாகம்
தவிர்ப்பதுதான் அருள்மனத்தார் கடமையன்றோ?








" கலப்புமணம் பெருகட்டும் இந்த நாட்டில்!
காதல்மணம் பெருகட்டும் இந்த நாட்டில்!"

**பொ**ன்மலரின் மயக்கம் தெளிகிறது. பெற்றோரின், உற்றாரின், மற்றோரின் மனமயக்கமும் நடுக்கமும் தெளிகிறது. பாடலும் தேனிசையும் இணைந்ததைப் போல், பாவலனும் பசுங்கொடியும் தழுவிக்கொள்கின்றனர். புதிய உறவுகள் அறிமுகமாகின்றன. கலகலப்பு அங்கே தேரோட்டம் நடத்து கின்றது. காதலர்களின் திருமணம் உறுதிப்படுத்தப்படுகின்றது. மகிழ்ச்சிச் சிறகு முளைத்துக் குதியாட்டம் போடுகின்றது-மனத்தால் இணைந்தோர் மணமக்களாகப் போகும் செய்தி கேட்டு!

கோடைதந்த வெம்மையினால் வெதும்பிப் போன
குழந்தையைப்போல் பண்ணரசன் மடியின் மீதே
ஆடாமல் அசையாமல் கிடந்த மங்கை
அழகொழுகும் உதடசைத்து முனக லானாள்!
மூடாமல் இமைதிறந்து கன்னி மூச்சின்
முனைப்பிற்கே காத்திருந்தோர் வெற்றி கண்டார்!
பாடலும் அத் தேனிசையும் இணைந்தாற் போலப்
பாவலனும் பசுங்கொடியும் தழுவிக் கொண்டார்!

மழைபொழியும் போதேஅவ் வெயிலோன் வந்து
முகங்காட்டிச் சிரிப்பதைப்போல் சிரித்தார்; கண்ணீர்
மழைபொழிந்து நெஞ்சத்தை நனைத்தி ருந்த
மாண்புமிகு பெற்றவர்கள் மற்ற வர்கள்!
தழைசெடிகள் பூங்காற்றில் கலக லத்தே
தலையசைத்தல் போல்மகிழ்ச்சி சலச லப்போ
இழைந்ததங்கே! ஒருவருமே எதிர்பார்க் காத
இனியதொரு சூழ்நிலையே கனிந்த தாங்கே!

"உன் விருப்பம்... உன்விருப்பம்...உன்விருப்பம்
ஒருதுளியும் பிசகாமல் இனிநடப்பேன்!
கண்மணியே! என்மகளே! இனிநான் உன்றன்
கண்கலங்கும் காட்சியினைக் காண மாட்டேன்!
அன்பழகி அறச்செல்வி! கருணைப் பொன்னி!
அம்மா! என் தாயே! நான் தீங்கே செய்யேன்!
பண்ணரசர்க்கே உன்னைக் கொடுப்பேன்" என்று
பாசத்தால் நெற்றிமுத்தம் தந்தார் தந்தை!

"மாப்பிள்ளை இனிநீங்கள் எங்கள் வீட்டு
மறுபிள்ளை! என்மகள் உம் செல்லப் பிள்ளை!
மூப்பில்லை எனக்கினிமேல்; இளமை வந்து
முளைத்தாலும் என்னுடம்பில் வியப்பே இல்லை!

தோப்பில்லை எனில்நாட்டில் பசுமை ஏது?
துணையில்லை எனில்வாழ்வில் சுவைதான் ஏது?
காப்பில்லை என்றிருந்தேன்: தமிழ்த்தாய் தூய
கவிஞரையே அனுப்பிவைத்தார் வாழ்க" — என்றே

வள்ளுவனின் குறள்போல அடக்கமாக
வக்கணையாய் நின்றிருந்த புலவன், தன்னைச்
செல்லமுடன் கரம்பற்றி உரைக்க லானார்!
சீர்மறவன் புல்லரிப்பால் தவிக்க லானான்!
நல்மனத்தார் மாப்பிள்ளை பெண் வீட்டாரோ
நனைந்தன்பால் சம்பந்தி முறைகொண் டாட
எல்லோரும் மணப்பெண்ணாய் நாணிக் கோணி
இழைந்திழைந்து புதுஉறவில் குழைந்தார் ஆங்கே!

"நான்வந்து...நான்வந்து முத்து: அன்பு
நாயகம் என் தாய்மாமன்! பல்லாண் டாக
நான் உங்கள் மறுமலர்ச்சிக் கவிதை எல்லாம்
நாடோறும் சுவைக்கின்ற சுவைஞன்: நீங்கள்
ஏன் வீணே மடிவதற்கு முனைந்தீர்; உங்கள்
இன்வரவால் எம்மினமே பெருமை காணும்!
தேன்கவிஞ! இனிநான் உன் தம்பி" என்றான்!
திரள் தோள்கள் ஒன்றிலொன்று பதிந்த தாங்கே!

"மிகவிரைவில் திருமணத்தை நடத்தி; இந்த
மென்தோளும் வன்தோளுங் கலக்க வைப்போம்!
அகத்துறையும் புறத்துறையும் பிணைந்த வாழ்வே
அன்பூறும் பேரின்ப வாழ்க்கை யன்றோ?
மகன்விருப்பம் மகள்விருப்பம் எதுவோ அந்த
மனவிருப்பம் அனைத்தும்நாம் தலைமேற் கொள்வோம்!
இகத்தலென்ப தினிவேண்டாம்: பாவம் என்றே
இருவீட்டுப் பெரியோரும் முடிவு செய்தார்!

"புறப்படலாம்" என்றார்கள், அந்த வேளை
"பெண் எங்கே மாப்பிள்ளை எங்கே?" என்று
பறப்பைபோல் அங்குமிங்கும் பறக்க லானார்!
"பயம்வேண்டாம் அப்பக்கம் விழிதிருப்பித்
திறப்படையப் பாருங்கள்" என்றார் ஓர்ஆள்!
திருமகளும் பெருமகனும் வெளியில் உள்ள
சிறப்பழகுப் பூங்கொடியின் மறைவில் நின்று
சிரித்துப்பே சிப்பழகும் காட்சி கண்டார்!

"அதற்குள்ளே அவசரமா? ஓ...ஓ...எங்கள்
அன்பிற்குள் முளைத்தெழுந்த இளமைப் பூக்காள்!
கதவுடைய வீடென்ற நினைப்போ! எங்கள்
கண்மணிகாள் கொஞ்சநாள்நீர் பொறுத்தி ருப்பீர்!
முதற்செயலே இனிஉங்கள் திரும ணந்தான்;
முத்துக்காள் வருக" வென்று அழைத்தார் பெற்றோர்!
கதலிமகள் காளைமகன் சேர்ந்த வாறு
களிப்போடு வருங்காட்சிக் கலைக்கண் காட்சி!

"மணமாகும் வரைஇனிமேல் எங்கள் பெண்ணின்
மலர்க்கரத்தின் நுனியையும் நீர் தொடக் கூடாது!
வணக்கத்திற் குரியதிந்த பெண்ணின் பெண்மை!
வரம்போடு பழகுதலே வாழ்வின் மேன்மை
பிணக்கென்மேல் கொள்ளாதீர் மாப்பிள் ளைநீர்!
பெரியவன்நான் அனுபவத்தால் சொன்னேன்" என்றார்
மணம்பரப்பும் மருக்கொழுந்து நெஞ்சத் தந்தை—
மற்றவர்கள் இதுகேட்டுச் சிரிப்பில் ஆழ்ந்தார்!

பிள்ளைகளின் விருப்பத்தை ஏற்றுக்கொண்ட
பெற்றோரும் மற்றோரும் சூழச் செல்லும்
கள்ளமென்ப தறியாத காத லர்கள்
கைவீசி நடக்கின்ற காட்சி தன்னை

நொள்ளைமனம் கொண்டோரே—பார்த்தீ ராநீர்!
நூறுவகை பேதத்தால் இவர்போன் றாரைக்
கிள்ளிஎறியும் உங்கள் கிறுக்குப் போக்கால்
கெட்டழிந்து போகாதா இந்த நாடு?

பிறர்வாழப் பொறுக்காத கண்ணும் நெஞ்சும்
பெற்றிருக்கும் மனிதர்களே! காழ்ப்பெண்ணத்தால்
பிறர்வாழ்வில் சூழ்ச்சிசெய்து மண்ணைப் போடும்
பேய்உணர்வுப் பேதையர்காள்! அதோ பாருங்கள்!
கரவறியாக் காதலர்கள் இன்ப வாழ்வுக்
கற்பனையில் பறந்தாடிப் போகின் றார்கள்!
திருடர்களே! இவர்போன்றாரைப்பிரிக்கத்
திட்டமிட்டால், இனிவருவோர் உதைகொடுப்பார்!

கூடிஉற வாடிப்பின் குழிபறிக்கும்
கொலைத்தொழில்செய் மனிதர்களே! அதோபாருங்கள்
ஈடில்லா மாணிக்கங்கள் இரண்டும்
இணைந்துறவா டிப்போகும் காட்சி தன்னை!
தேடிடினும் கிடைக்காத இந்தக் காட்சி
திறந்திடுமா உம்கண்ணை; ஒன்று சேர்ந்த
கேடிழையாக் காதலரைப் பிரித்திடாதீர்!
கீழறுப்பு வேலைசெய்தால், பல்லுடையும்!

அறம்பாடித் திரியாதீர்; வேளா வேளை
ஆண்டவனைத் தொழுவதாய்நீர் நடித்தி டாதீர்!
நரம்புதசை குருதியினில் எல்லாம் தீய
நச்சுணர்வுச் செயல்களையே திணித்து வைத்துப்
பரம்பொருளைத் தேடுகின்றேன் என்று சொல்லல்
பகல்வேடச் செயலன்றோ? பாவ மன்றோ?
துரும்பளவும் மற்றோர்க்குத் தீங்கு செய்யாத்
தூயஉள்ளங் கொண்டி டுங்கள்; உயர்வு கொள்வீர்!

பொன்மலரும் பண்ணரசும் ஏக்கம் தீர்ந்து
புலர்வாழ்வில் அடியெடுத்து வைக்கப் போகும்
நன்னாளாம் மணநாளோ; நல்நெஞ் சங்கள்
நனைந்துபெரும் மகிழ்விற்குள் நீந்தும் நாளாம்!
அன்புருவக் காதலர்கள் மாலை மாற்றி
அழகொழுக வீற்றிருக்கும் காட்சியோ நம்
தென்னகத்தார் பெரும்புரட்சி வெற்றி நாளாம்!
திருமணமக் கள்வாழ்க!வாழ்க! வாழ்க!

கலப்புமணம் பரவட்டும் இந்த நாட்டில்!
காதல்மணம் பெருகட்டும் இந்த நாட்டில்!
கலப்புமணம் செயத்துடிக்கும் காதலர்க்குக்
காப்பளிக்கத் துணியட்டும் அரசு; நீண்ட
நிலப்பரப்பில் சாதிமதப் பாகு பாடு
நெருப்பண்டா திருப்பதற்கே உழைப்போம் நாமே!
சலசலப்பிற் கஞ்சாது விழிதுஞ் சாது
சாயாத மலர்ச்சியினைப் படைப்போம் நாமே!

தமிழரெல்லாம் ஓரினத்தார் என்ற செய்தி
தழுவட்டும் தமிழ்நெஞ்சை: இனிமேல் பூக்கும்
தமிழரெல்லாம் ஒருதாயின் பிள்ளை யாகத்
தவழட்டும் தமிழ்நிலத்தில்; வருங்காலத்தில்
தமிழரெலாம் உலகோடு தோள்பி ணைத்துத்
தலைநிமிர்ந்து நடக்கட்டும் புகழ்ப்பூ ரிப்பில்!
தமிழரெல்லாம் வேற்றுமைசேர் ஏற்றத் தாழ்வுத்
தடம்புரட்டி மீளட்டும் வெற்றி வாழ்வில்!

1967–68



—கவிஞர் பொன்னடியாரின்

# ஓர் இதயத்தின் ஏக்கம்

## நெஞ்சைத் தொட்ட பகுதிகள்

குமர கணபதி – சிதம்பரம்

**'ஓர் இதயத்தின் ஏக்கம்' குறுங்காவியம் 'முல்லைச்சரம்' இதழில் தொடராக (1968) வெளிவந்த போது கவிஞருக்கு வந்த மறக்க முடியா ஆய்வுக் கட்டுரைகளில் ஒரு கட்டுரை இது.**

*பருகப் பருகத் திகட்டாத பழச்சாற்றை, காதல் காவியத்தை, இதய ஓவியத்தை 'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற பெயரால் வடித்துத் தந்த கவிஞரே! வணக்கம். உங்கள் உயிரோட்டம் ததும்பும் காவியத்தினை நானும் என் நண்பர்களும் சேர்ந்து படிப்பது வழக்கம். அப்போது என்னுடைய நண்பர் "சபா" என்பவர்,*

"மார்பின்
கச்சுக்குள் கட்டுண்ட ஒன்றை எண்ணிக்
கண்ணே! பால் வேண்டுமென்பான்"

-என்ற அடிகளில் நெஞ்சைத் தொடும் சுவை நிறைத்திருக்கிறது என்று வியந்து கூறினார். என்னையும் இந்தப் பகுதியும் இன்னும் எத்தனையோ இன்பப் பகுதிகளும் மிகவும் கவர்ந்திழுத்தன. எனவே 'நெஞ்சைத் தொட்ட பகுதிகள்' என்னும் கோணத்தில் அவற்றைத் தொகுத்துத் திறனாய்வுக் கட்டுரையாக வரைகின்றேன்.

ஓர் இலக்கியம் நெஞ்சைத் தொடுவதற்கும், சாகாத் தன்மை பெறுவதற்கும் கற்பனை வளம் மட்டும் அவ் விலக்கியத்தில் நிறைந்திருந்தால் போதாது. அதில் உண்மைத் தன்மையும் அதாவது உயிரோட்டமும் தவழ வேண்டும். ஓர் இதயத்தின் ஏக்கத்தினைப் படிக்கும் போது இலக்கியம் படிக்கின்றோம் என்ற உணர்வே எழவில்லை. உண்மையாகவே எவருடைய வாழ்விலோ நடப்பதைப் போலவும் நாங்கள் நேரில் காண்பதைப் போலவுமே உணர்வுகள் தோன்றுகின்றன. தமிழ் இலக்கிய வரலாற்றில் 'ஓர் இதயத்தின் ஏக்கம்' புதிய மரபையே தோற்றுவித்துவிட்டது.

காதலன் பண்ணரசன் தீட்டுங் கடிதத்தில் -

"கண்ணாலே சிரிப்பாயே முகத்தைப் பொத்திக்
கைவிரலின் இடுக்காலே எனைப்பார்ப் பாயே"

-இந்த வரிகளை இளம் வாலிப நெஞ்சங்கள் எண்ணி எண்ணி மகிழாமல் இருக்க முடியுமா?

'இளஞ்சிவப்பு ரோஜாப்பூ நிறச்சே லைக்குள்
எடுப்பான உன்னுடலை மறைத்தே அந்த
வளமான பேரமைதிச் சிரிப்பை வீசி
வக்கணையாய் ஒயிலாக நடப்பா யேநீ!
குளுகுளுப்பில் இன்றுமெனை அந்தக் காட்சி
குளிப்பாட்டி மகிழ்விக்கும்"

என்னும் அடிகள் பேரழகுப் பெட்டகமான ஒரு மங்கை எழிற் கோலத்தோடு, இன்பக் கிளுகிளுப்பினை உண்டாக்கும் வகையில் நடந்து வருவது போன்ற பிரமை ஏற்படுத்துகின்றன.

"பொன்மலர் பண்ணரசனுக்குத் தீட்டும் மறுமடலில் -

'அத்தான்' என் றழைப்பதற்கும்; ஆசை யோடே
  ஆருயிரே! என்பதற்கும்; மற்றோர் முன்னே
பித்தாகி "அவர் – இவர்" என் றுங்க ளைநான்
  பெருமையுடன் உரைப்பதற்கும் பேறில் லாத
சொத்தைமகள் ஆகிவிட்டேன்; வாழ்வில் உங்கள்
  சொத்தாகும் பெருமையினை இழந்துவிட்டேன்"

என்ற வரிகளில் ஒரு பெண்ணின் ஏக்கத்தை ஆசைக் கனவுகளை அழகாக வடித்து வைத்திருக்கின்றீர்கள்.

"கரம்பற்றப் போகின்ற கணவ ரோடு
கற்புமக ளாய்வாழ அருள்தா ருங்கள்"

-என்ற பகுதியும்

"முல்லைப்பூ ரோஜாப்பூ இரண்டும் உங்கள்
  மனம்விரும்பும் பூக்களன்றோ; அதனால் அந்தக்
கொள்ளையழ குப்பூக்கள் சூட மாட்டேன்
  கூந்தலிலே! அந்நிறத்தில் ஆடை கூட
மெல்லுடலில் நான் அணிய மாட்டேன்; நீங்கள்
  மிகையாக விரும்புவதை விரும்ப மாட்டேன்"

என்ற வரிகளையும் ஆழ்ந்து படிக்கும்போது நம்மையும் அறியாமல் நம் கண்களில் கண்ணீர் முத்துக்கள் பெருகிவிடுகின்றன.

பொன்மலர், பண்ணரசன் நல்வாழ்வு வாழவேண்டும் என்னும் ஆவலில்

"மனமுடைந்து போகாமல் ஒருத்தி யைநீர்
  மணமுடித்தே இல்லறத்தைச் சுவைக்க வேண்டும்!
தனிக்கட்டை யாய்வாழ்ந்து வெறுப்பில் வீழ்ந்து
  தமிழ்க்கடலே! உடலைப்பா ழாக்க வேண்டாம்!
மனைவியுடன் குழந்தையுடன் ஒருநாள் என்றன்
  மனைதேடி விருந்திற்கு வரத்தான் வேண்டும்!
கனிச்சாறாம் அக்குழந்தை கன்னத் தில் நான்
  கணக்கில்லா முத்தங்கள் பொழிய வேண்டும்!"

-என்னும் பகுதி நெஞ்சைத் தொடுகின்றது. காதலனுக்குத் தர நினைத்திருந்த முத்தங்களை அவன் குழந்தைக்குத் தரத் துடிக்கின்றது பெண்ணுள்ளம்.

இறுதியாக,

"பிறைநிலவாய் உங்கள்புகழ் வளரும் செய்தி
பெறவேண்டும்! வேறென்ன எனக்கு வேண்டும்?

-என்று தலைவி விரும்புவது பொருத்தமான நேர்மையான விருப்பம். பொன்மலரின் கடிதங்கண்ட பண்ணரசன், உயிரைப் போக்கிக்கொள்ளத் தூக்கமாத்திரை உண்டுவிட்டுப் பின் வரைந்து வைத்திருக்கும் இறுதி மடலில்,

"நாய்களுக்கும் பற்றுப்பா சங்க ளுண்டு
நல்லறிவு மனிதர்க்கோ எல்லாம் வேடம்"

-என்ற வரிகளில் காணப்படும் உணர்ச்சியின் வேகம் காதல் இதயத்தின் வேதனையை நன்கு விளக்குகின்றது.

"அவளுக்கே கொடுப்பதற்கு வைத்தி ருந்த
அன்புமுத்தங் களை அவளின் மடல்க ளுக்கே
தவறாமல் மறக்காமல் தந்து விட்டுத்
தழுவிவிட்டேன் மீளாத ருெமைச் சாவை"

-என்ற வரிகள் படிப்போரை ஏக்கத்தின் உச்ச கட்டத்துக்கே இழுத்துச் செல்கின்றன.

"ஏய்உன்னைத் தான் – இங்கே வாவா" என்றே
இனியவளை உரிமையுடன் அழைப்ப தற்கும்
சேய்அவளை "ஓ....மண்டே அசடே" என்று
சீற்றமுடன் கொஞ்சலுடன் உரைப்ப தற்கும்
வாய்மணக்க "என்கண்ணே! பொன்னே" என்று
வாரியணைத் தேமுத்த மிடுவ தற்கும்
வாய்ப்பு வரும் என்றிருந்தேன்"

என்ற வரிகளில் காதல் உள்ளத்தின் உணர்வுகளைப் பிழிந்து விட்டீர்கள். இதில் காணப்படும் "கவிதா சக்தி" மிக உயர்ந்தது. ஒருவேளை நீங்கள் வாழ்வில் அனுபவிப்பவற்றைத்தான் எழுதுகின்றீர் களோ? என்ற ஐயங்கூட எழுவதில் வியப்பில்லை.

"கிள்ளைமொழி தேன்மனைவி அணைப்பில் வீழ்ந்து
கிறுக்கனைப்போல் அவள்காட்டும் வழியில் வாழ்ந்து

பிள்ளைகளைப் பெற்றெடுத்து மணம்மு டித்துப்
பேரன்,பேத் திகள் மழலை மொழிகள் கேட்டுத்
தள்ளாடித் தள்ளாடித் தலையை ஆட்டித்
தடியூன்றிப் போகாமல் மனித வாழ்வின்
பள்ளம்மே டுகள்எல்லாம் தாண்டிப் பார்த்த
படுகிழமாய்ச் சாகாமல் போகின் றேன்நான்"

என்ற அடிகளில் வாழ்வின் இலட்சியங்களையும், ஆசைகளையும் மிக அலட்சியமாக, ஏக்கத்தை வெளிப்படுத்தும் வேகத்தில் விளை யாடி வைத்திருக்கின்றீர்கள்.

"ஒருமுறையே னும்அவளின் திருமு கத்தை
உயிர்போகும் முன்பார்க்க எனக்கோர் ஆசை"
வருமா அப்பெருவாய்ப்பு?

உயிர் போகின்ற நேரத்திலும் எழுகின்ற "அற்ப ஆசை" "இயல்பான ஏக்கம்" இவற்றை அழகாகச் சித்தரித்து விட்டீர்களே.

வாழ்ந்தால் பண்ணரசனோடு வாழ்வது, அவர் மடித்தால் தனது வாழ்வையும் முடித்துக் கொள்வது என்னும் முடிவோடு ஓடிவந்த பொன்மலர்,

"பேரன்பே! உங்கட்காய்ப் பிறந்தி ருக்கும்
பேதைமகள் இதோ இதோ நான் வந்து விட்டேன்

'இதோ இதோ' என்ற வார்த்தைகளில் உண்மைத் துடிப்பு உருளுகின்றது.

மணவீட்டில் மணமகளைக் காணவில்லை என்பதில் எழுங் குழப்பங்களை மிகமிக நயமாக விளக்குகின்றீர்கள்.

"விருந்தை உண்ண
வந்திருந்த உறவினரோ அழுதார் ஆங்கே"

நல்ல விருந்து உண்ணலாம் என்று வந்திருந்த உறவினர் இந்தக் குழப்பத்தால் தங்கள் விருந்து போய் விட்டதே என்ற ஏக்கத்தில், பசியில் அவர்கள் அழுகின்றார்களாம்.

-இந்த இடத்திலும் துள்ளிவிழும் நகைச்சுவை உணர்ச்சி என்னை மிகக் கவர்ந்துவிட்டது.

மகளைக் காணாத தந்தை அன்பு நாயகம்

"மடிமீதும் தோள்மீதும் மார்பின் மீதும்
மலர்மகளே உனைக்கிடத்தி வளர்த்தேன்; பட்டப்
படிப்புவரை படிக்கவைத்தும் களித்தேன்; என்றன்
பரம்பரைக்கே ஒருபெண்நீ! இனிமைப் பண்நீ!
வடிவழகே உன்விருப்பப் படிந டந்தேன்
வைத்தகுறை என்னம்மா ?"

என்று தனக்குத்தானே அரற்றிக்கொண்டு வீழுங்காட்சி அவரது பண்பட்ட இதயத்தினைப் படிப்போர்க்கு உணர்த்துவதோடு அனைவருக் கும் அன்பு நாயகத்தின் மீது ஒரு அன்பினை உண்டாக்குகின்றது.

அன்புநாயகம் மேலும் கூறுகின்றார்:

"தப்பறியாச் சிறுமலராய்ப் பாவா டைக்குள்
தமிழ்பேசி நீதிரிந்து வளர்ந்த போதோ
இப்போதே நகைபோட வேண்டும்; அப்பா
என்காதில் துளைபோடென் றடம்பிடித்தாய்
அப்பப்பா! நச்சரிப்பால் தட்டான் வந்தே
அணிகாதைக் குத்திவிட்டான்; அழவே இல்லை!
அப்போதே அவன் சொன்னான்; 'பிடிவா தப்பெண்
அன்பரசி இவள்' என்று. சரியாய்ப் போச்சே"

-அதாவது நம் காவியத் தலைவி இளமையிலிருந்தே எவ்வளவு உள்ள உரம் படைத்தவள் என்பதைத் தெளிவாக்குகின்றீர்கள். இப் பகுதியில் நல்ல உளவியல் தத்துவம் உலாவருகின்றது. ஒரு மாபெருங் கவிஞருக்கு உளவியல் அறிவு எவ்வளவு தேவை என்பதனை இந்த இடம் சுட்டிக் காட்டுகின்றது. காதற் சுவையைப் பிழிந்து தருகின்றீர்கள். நயமான காதற் சுவையையும் இதைவிட அழகாக எந்தக் கவிஞரும் கூறிவிட முடியாது என்று சவால் விடுவது போல் அப்பகுதியும் அமைந்திருக்கின்றது.

"அச்சச்சோ அங்கேபார்" என்று கூறி
அவள் பார்வை வேறுபக்கம் திருப்பி விட்டே

'இச்'சென்றே ஒருமுத்தம் வைப்பான்; அந்த
இளங்குழந்தை பட்டுக்கன் னத்தின் மீது!
நச்சுக்கண் மனிதர்களோ பார்க்கா நேரம்
நறுமலராள் கரம்பற்றி உள்ளங் கையில்
எச்சிலித ழால்முத்தம் பதிப்பான்;

ான்ற பகுதியும்,

"மார்பின்
கச்சுக்குள் கட்டுண்ட ஒன்றை எண்ணிக்
கண்ணேபால் வேண்டுமென்பான் சிரித்துக் கொண்டே!

என்ற பகுதியும்,

"பழச்சாற்றை அருந்துங்கள்" என்றே பாவை
பாட்டிசைக்கும் பாவலன்பால் கேட்கும் போது
பிழியாத உன்சிவந்த இதழ்ப்ப ழத்தில்
பிழிந்தெடுத்த பழச்சாறே உண்பேன்; கண்ணே!
வழிவிடுவாய் தடுக்காதே" என்பான் தோழன்!

என்று பண்ணரசன் கொஞ்சும் பகுதியும்,

"போங்களத்தான் நீங்களொரு குறும்புக் காரர்
பொல்லாதத் தனம்செய்தால் அழுவேன்; ஊம் ... ஊம் ...
தூங்காமல் நமைச்சுற்றி விழித்தி ருக்கும்
துருதுருத்த கண்களுண்டே எச்ச ரிக்கை!
தூங்குங்கள் உடல்தேர வேண்டும்; உங்கள்
தோகைமயில் வேறெங்கும் போகா" தென்றே
சீங்குழலாள் பண்ணரசன் மோவாய் நீவிச்
சிணுங்குவதும் கொஞ்சுவதும் குடும்பக் காட்சி!

என்ற பாட்டும்,

"மகள்மு கத்தைக்
கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்
கருணைமனத் திற்குவமை தேடு கின்றேன்! -என்று

-உவமைகளைக் காவியம் முழுவதும் எழுதிக் குவித்த நீங்களே உவமை தேடுகின்றேன் என்று திகைத்து எழுதுவதும் அந்த அருமையான மனிதரின் (அன்புநாயகத்தின்) கருணை மனத்தினைத் தெளிவாக விளக்குகின்றது. உவமைகளில்கூடக் காணாத சுவையை நீங்கள். உவமையைத் தேடும்போது நாங்கள் காண்கின்றோம்.

அன்பு நாயகம்,

"எச்சாதி எம்மதமாய் இருந்தா லென்ன?
  தப்புதண்டா வழிப்போகாப் பையன் என்றால்
தாராளமாய் முடிச்சுப் போட லாமே"

என்று கூறுவது மிகவும் இனிமையாக இருக்கிறது.

"தூய தமிழ்க் காதலர்க்குத் தடையாய் நிற்போர்
  தோள்முறிப்போம்; தூக்கிலிடச் சட்டம் செய்வோம்"

என்ற வரிகள் உணர்ச்சிக் கொந்தளிப்பாய் ஓடி வருகின்றன.

பழம் மாப்பிள்ளை முத்து பண்ணரசனிடம் தன்னைத்தானே அறிமுகம் செய்துகொள்ளும் காட்சி இயல்பான சுவையோடு அமைந்திருக்கிறது.

"நான்வந்து.... நான்வந்து முத்து; அன்பு
  நாயகம்என் தாய்மாமன்! பல்லாண் டாக
நான்உங்கள் மறுமலர்ச்சிக் கவிதை எல்லாம்
  நாடோறும் சுவைக்கின்ற சுவைஞன்; நீங்கள்
ஏன்வீணே மடிவதற்கு முனைந்தீர்; உங்கள்
  இன்வரவால் எம்மினவே பெருமை காணும்
தேன்கவிஞ! நான் உங்கள் தம்பி"

என்னும் பகுதிகளை நேரில் வந்து முத்து பேசுவதைப் போலவே அமைத்து விட்டீர்களே!

திருமணத்திற்கு முன் தனியே சிரித்துப் பேசிப் பழகிக் கொண்டிருக்கும் இளங்காதலரை, "அதற்குள்ளே அவசரமா? இந்தப் பூங்கொடியின் அருகே நிற்பதை கதவுடைய வீட்டுக்குள் இருப்பதாக நினைத்துவிட்டீர்களோ?"

என்று கூறி அழைத்த அன்பு நாயகம் மேலும்;

"மணமாகும் வரைஇனிமேல் எங்கள் பெண்ணின்
மலர்க்கரத்தின் நுனியையும் நீர் தொடக்கூ டாது"

வணக்கத்திற் குரியதிந்தப் பெண்ணின் பெண்மை
வரம்போடு பழகுதலே வாழ்வின் மேன்மை
பிணக்கென்மேல் கொள்ளாதீர் மாப்பிள் ளைநீர்
பெரியவன்நான் அனுபவத்தால் சொன்னேன்"

-இவ்வாறு பண்ணரசனிடம் கூறும் பகுதி நெஞ்சைத் தொடுகிறது. ஒரு பெரியவரின் நல்லவரின் பாத்திரத்தைக் குறைவறப் படைத்து விட்டீர்கள்.

மற்றொன்று,

எல்லாப் பாத்திரங்களையுமே மிகவும் உயர்ந்த மனங் காண்டோராகப் படைத்துக் கதையையும் துவளவிடாமல் விறுவிறுப்பாக ஓட்டிச் செல்வதும் காவியத்தின் இறுதியில் கவிஞர் கூற்றாக சமுதாயத்துக்கு அள்ளித் தரும் நற்கருத்துக்களும் உவமை நயங்களும், கற்பனை வளமும், கற்பனைக் கேற்ற சொல்லாட்சியும், காவியத்தின் உயிரோட்டமும், எல்லாம் சேர்ந்து இக் காவியத்தை இறவாக் காவியமாக, நெஞ்சில் நிலைத்து நிற்கும் காவியமாகச் செய்துவிட்டன என்பதில் சற்றும் ஐயமில்லை.

●





# உலக அளவில் ஆய்வுக்குரிய ஒப்பிலாக் குறுங்காவியம்

**திருமதி ஆர் இந்திராபாய்** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,

அறிமுகம்

கவிதை உலகின் இருபெருங் கவிஞர்கள் பாரதியார், பாரதிதாசன் ஆவர். இவர்களுள் புரட்சிக் கவிஞர் பாரதி தாசனின் நம்பிக்கைக்குரிய மாணவராக 1960-ஆம் ஆண்டு முதல் பாவேந்தரின் இறுதிநாள் வரை, விளங்கியவர் கவிஞர் பொன்னடியார் அவர்கள். தமிழகத்தின் பெருமை மிகுந்த, தகுதி

வாய்ந்த கவிஞர்களில் அவர் குறிப்பிடத்தக்கவர் ஆவார். 1966-ஆம் ஆண்டு முதல் 'முல்லைச்சரம்' என்னும் இலக்கிய ஏட்டினைத் தொடங்கி, இன்றுவரை வெற்றிகரமாகப் பயணம் செய்து வருகின்ற தனித்தன்மை வாய்ந்த பெருமையும் அன்னாருக்குண்டு.

1971-ஆம் ஆண்டு, உலகக் கவிதை இலக்கியத் துறையின் திருப்புமுனை நிகழ்ச்சியாக விளங்கும் திறந்தவெளிக் கவியரங்குகளின் தாய்க் கவியரங்கமான 'கடற்கரைக் கவியரங்'கைத் தொடங்கி இன்றுவரை நடத்தி வருவதோடு எண்ணற்ற கவிஞர்களை, எழுத்தாளர்களை, ஆராய்ச்சியாளர்களை உருவாக்கி வருவது போற்றற்குரியதாகும். தமிழகத்தில் மட்டுமின்றி, பிற மாநிலங்களிலும் பல திறந்த வெளிக் கவியரங்கங்கள் தோன்ற முன்னோடியாகத் திகழ்வதோடு மட்டுமல்லாமல், பிறமொழிகளிலும் இவரது படைப்புகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

ஐ.நா. பண்பாட்டுக் கழகம், 'அழுத்தப்பட்ட மக்களுக்காகப் பாடும் எழுச்சிக் கவிஞர்' என்ற பட்டம் அளித்துச் (1969) சிறப்பித்துள்ளது.

பாவேந்தர் நூற்றாண்டு விழாவில் 'பாரதிதாசன்' விருது கவிஞருக்கு அளிக்கப்பட்டது. 'கலைமாமணி விருது' போன்ற பல விருதுகளும் பெற்று சிறந்து விளங்குகிறார் கவிஞர்.

இவர் எழுதியுள்ள நூல்கள் காலத்தால் அழியாதவை. அவற்றுள் 'ஓர் இதயத்தின் ஏக்கம்' என்ற குறுங்காவியம் முக்காலத்தும் நிலைத்து நிற்கக்கூடிய ஒரு சிறந்த குறுங்காப்பியமாகும்.

1968 ஆம் ஆண்டு இவரது 'முல்லைச்சர'த்தில் தொடராக வெளிவந்து, பலதரப்பினராலும் குறிப்பாக இளம் தலைமுறையினராலும் பெரிதும் வரவேற்கப்பட்ட குறுங்காவியம் இது.

சிறக்க, பெற்றோர் உறுதுணையாக இருத்தல் வேண்டுமென அழுத்தந் திருத்தமாக கவிஞர் உரைக்கின்றார்.

ஒரு காப்பியத்தில் படைக்கப்பெறும் கதாபாத்திரத்தினர் தாம் நிகழ்ச்சிகளுக்கு உயிரூட்டக் கூடியவர்கள். அந்த வகையில் சரியான கதாப்பாத்திரங்கள், குழப்பமில்லாத கருப்பொருள், உணர்ச்சிபூர்வமான பாடல் வரிகள், தற்கால சமுதாயத்திற்கு ஏற்ற முடிவுகளைக் கூறி அந்தாதிபோல் ஒரு சேர தொடுக்கப் பட்ட அழகிய பாமாலை இக்காவியம் ஆகும்.

## வருணனை

படைப்பாளர்கள் சிறந்த கலையுணர்ச்சி உடையவர்கள். அவர்களின் வருணனையில் அந்தக் கலைச் சிறப்பு விளங்கும். ஏதேனும் ஒன்றைப் பற்றி விளக்கும்போது, அந்த விளக்கத்தால் அந்தப் பொருளை மனக்கண் உடனே காணும். கண்ணால் காண்பது மட்டும் இல்லாமல் மற்ற புலன்களாலும் உணர்வது போன்று அனுபவம் ஏற்படும் என்று டாக்டர் மு.வ. அவர்கள் தன் 'இலக்கிய மரபு' என்னும் நூலில் கூறியுள்ளார்.

காவியத் தலைவி பொன்மலரை வர்ணிக்கும் போது, குளிர்ந்த நிலைகளையே சான்றாக எடுத்து, படிப்பவர்களின் மனத்திற்குப் புத்துணர்ச்சியை அளிக்கிறார் கவிஞர்.

☆ *'புதுமணத்தை பொன்னொளியை, கோடைகாலப்*
*பூங்காற்றை, குளிர்நிலவை, அழகின் கூத்தை*
*மதுமலரை எல்லாம் நான் வெறுத்து விட்டேன்''*

☆ *பூக்காடே! நான் காணவேண்டும் மீண்டும்!*

☆ *'பாடி வந்த தேனாறே! பருவம் தோய்ந்த*
*பனிமலரே!*

☆ *'உன் தோழிக் குழுவுடனே நீயும் அங்கே*
*ஒளிவெள்ள மாய்த் தோன்றிக் காட்சி தந்தாய்!*

☆ *'தண்ணமுதே! தோழர்க்குத் தெரியா வண்ணம்*
*தலையாட்டி விடைபெற்றோம் பழங் கதைதான்!*

☆ *'கவிதையின்றி இலக்கியமும் பூப்பதில்லை!*
*கனிச்சாறே நீயின்றி நானும் இல்லை!*

☆ *..................... தயிர்போல் மேனி*
*தளதளக்கும் பூப்பந்தே! கூச்சமின்றித்*
*தந்துவிடு தந்துவிடு உன்னி சைவை!*

என்று இப்படி உயிர்ப்போவிய வரிகளால் வருணிக்கின்றார்.

காதலை மறந்த நிலையில், மனம் பேதலிக்கும் போது எதிர்மறையாக வெம்மையானப் பொருட்களை அச்சூழ்நிலைக் கேற்ற விதத்தில் கையாளுகின்றார்.

☆ ...................................................................................
...................................................................................
*கொதி புனலின் கொதிப்பானேன்; வெம்மை யாலே*
*கொப்புளித்த கொப்புளம் போல் ஆனேன் கண்ணே!*
...................................................................................

☆ *'தவிக்கின்றேன்! தவிக்கின்றேன்! தவிக்கின்றேனே!*
*தணற்காட்டில் நடக்கின்றேன் நடக்கின் றேனே!*

என்று பண்ணரசன் புலம்புவதாக நயம்பட விளக்குகின்றார். உள்ளத்தின் ஆசைகள் கனவுகளாக மாறிவிடுமோ என்ற அச்சத்தில் பரிதவிக்கும் மனதை உடையவளான பொன்மலர் பண்ணரசனின் நினைவினை பற்றி கூறும்போது,

☆ *'இங்கு வந்த நாள்முதலாய் எனக்கு வாழ்வோ*
*எரிசூளை, இரும்பாலை யான தென்பேன்!*

என்று தன் மனவேதனையை வெளிப்படுத்துவதாக கவிஞர் உரைக்கின்றார்.

கவிஞர் அவர்கள் கவிதையாற்றில் துள்ளி ஓடும் துடிப்பான தனித்திறன் படைத்தவர் என்பது இதன்மூலம் புலனாகின்றது. மேலும் இவர்புதுமை நெஞ்சினராய், புதிய புதிய உருவங்களைப் படைக்க விரும்புகிறார். புதிய கற்பனைகள், புதிய வருணனைகள் கவிதை உலகிற்கு புத்துயிர் அளிப்பனவாக உள்ளன.

## உவமை நயம்

பொதுவாக ஒரு நூலின் தொடக்கத்தினை ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைப்பது என்பது ஓர் உத்தியாகும். நடைமுறை நிகழ்ச்சிகள், இலக்கியம் பற்றிய செய்திகள், உவமைகள் ஆகியவற்றின் வாயிலாக தொடங்குவர். அந்த வகையான உத்தியைப் பயன்படுத்தி காவியத்தின் எட்டுப் பிரிவுகளின் தொடக்கத்திலும் பாடல்வரிகள், உவமைகள் கொண்டு காவியத்தை ஆரம்பித்து சுவைபட அனைவரின் மனத்தையும் கவர்ந்துள்ளார் கவிஞர்.

இக்காவியம் முழுவதும் கற்பனை நயமும், உவமை நலமும் கொஞ்சுகிறது. தமக்கென தனிப்பாதையை வகுத்துக் கொண்டு உயிரோட்டமிக்க உவமைகளைப் பயன்படுத்தி, தூய கவிதைக்காரர் மரபில் நின்று வெற்றி நடைபோடுகிறார். இவரது குறுங்காவியம் உவமைகளின் மேடையில் சதிராட்டம் ஆடுகிறது. இதுபோன்று அதிக எண்ணிக்கைகளின் அடிப்படையில் கவிஞர்கள் எவரேனும் உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார் களா? என்பதே வினாவிற்குட் பட்டதாகும். உலக அளவில் ஒப்பியல் கண்ணோட்டத்துடன் பார்க்கத் தூண்டும் ஓர் ஆய்வு

நிலையை ஏற்படுத்தியுள்ளமை கவிஞரின் பெரும் புலமைக்கு ஓர் சான்றாக அமைந்திருப்பது சிறப்பான தொன்றாகும்.

உவமைகளைப் பயன்படுத்துவதன் மூலம் ஒரு காவியம் தனி அழகும், மிடுக்கும் கொண்டு கருத்தாழம் மிக்கதாக மிளிரும். இந்த அடிப்படையில் கற்பனை, நடைமுறைச் சான்றுகளைப் பயன்படுத்தி உவமைக் களஞ்சியமாகவே இக் காவியத்தைப் படைத்துள்ளார் கவிஞர்.

ஓர் இதயத்தின் ஏக்க குரலாக முதல் பிரிவு தொடங்கு கிறது. உவமைகளாலேயே காவியம் முழுமையும் ஆட்சி செய்கிறாா கவிஞர்.

☆ *நீர் பிரிந்த நிலம்போலே நானோ இங்கே*
*நின்பிரிவால் வறண்டுள்ளேன்!"*

என்ற வரிகள் பொன்மலரின் பிரிவு ஒரு மக்கள் கவிஞரின் ஏக்கத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

'ஒரு புத்தகத்தை நாம் படிப்பதைவிட புத்தகம் நம்மைப் படிக்கவேண்டும்'. இதற்கேற்றாற்போல் காவியத் தொடக்கமே, தலைப்பிற்கேற்றாற்போல் பண்ணரசனின் இதய ஏக்கமாக இல்லாமல் படிப்பவர்கள் அனைவரின் ஏக்கமாக மேலும் மேலும் படிக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் அமைத் திருப்பது தான் ஒரு படைப்பாளியின் வெற்றியாகும். அப்பேற்பட்ட பாதையில் ராஜநடை போட்டு மிளிர்கிறார் கவிஞர். மக்கள் வாழ்க்கையில் நடைமுறையில் உள்ள பொருட்கள், காணுகின்ற காட்சிகள் அனைத்தும் உவமை களாக வந்து காவியத்தை மெருகூட்டுகின்றன. உவமைகளின் தொகுப்பு பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளன.

☆ *கார்மேகம்போல் எந்தக் கணமும் வற்றாக்*
*கண்ணீரைச் சொரிகின்ற நிலையில் உள்ளேன்–*

☆ பொரி உருண்டை போலே நான் தக்கை யானேன்!

☆ என்னரசி நீபிரிந்து சென்ற போதோ
புதிருக்குள் சிக்கியதோர் விடையே யானேன்
பொய்மைக்குள் புகுந்தழியும் உண்மை யானேன்

☆ கொப்புளித்த கொப்புளம் போல் ஆனேன் கண்ணே!
☆ நிலம்பழையால் சேறாகிப் போன தைப்போல்

☆ கரையொதுங்கித் தவிக்கின்ற கப்ப லானேன்!

☆ முற்றுமுன்னே பறித்துவிட்ட காய்போல், கொம்பில்
முழுதாகப் பழுப்பதற்குள் வீழ்ப ழும் போல்;
கற்றுத் தேர்ந்து அறிவதற்குள். வறுமையாலே

☆ கல்வியினை நிறுத்திவிட்ட தோழனைப் போல்

☆ பூக்கின்ற புன்னகையால்; மழைக்காலத்தில்
கரைமீறிப் பாய்கின்ற வெள்ளம் போன்ற

☆ தயிர் போல் மேனி

காத்திருப்பேன்! பலநூறு ஆண்டானாலும்

கரிகாலன் கல்லணையின் சிலையைப் போலே

காத்திருப்பேன் குன்றம்போல், இல்லை—தீயில்
கருகியதோர் மரம்போலே பட்டுப் போவேன்.

## 2

☆ வெறிச்சோடிக் கிடக்கின்றேன்; விளைந்த நன்செய்
விளைநிலமோ அறுவடைக்குப் பின்பு காய்ந்து
வெறிச்சோடிக் கிடப்பதைப்போல்—

☆ பனிப்புயலில் சிக்குண்ட பறவை யானோம்
பாதிவழி யில் பிரிந்த துணைக ளானோம்

☆ பொங்கியெழும் உணர்விற்குள் இரண்டுள் ளங்கள்
புத்துருக்கு நெய்போல மணந்த துண்மை!

☆ தங்களை நான் பிரிந்துவந்த போதோ; சீறும்
தணற்குளியல் குளித்தவளாய் ஆனேன் உண்மை!

☆ உலைநீரில் அரிசிவெந்து மலர்ந்த தேபோல்
ஒளிபெற்றேன் பெண்மையெனும் பெருமை பெற்றேன்!

☆ பள்ளத்தின் நீர்போலே நீங்கள் அன்று
பலநண்பர் புடைசூழ இருந்த தாலே
வெள்ளத்தில் சிக்குண்ட துரும்பாய்க் கோடி
வெதும்பலுடன் குமுறலுடன் திரும்பி விட்டேன்!

☆ உடைமாற்றிக் கொள்வதைப் போல் மனத்தை மாற்றும்
உலகத்தார் போலிவழி போகின் றேன்நான்!

☆ பிறைநிலவாய் உங்கள் புகழ் வளரும் செய்தி
பெறவேண்டும்! வேறென்ன எனக்கு வேண்டும்?

☆ நீக்கமற நிறைந்திருப்பேன்; உங்கள் நெஞ்சில்
நிழல் போலே கவிதைகளாய்ப் படிந்தி ருப்பேன்!

☆ காய்பழுத்துக் கனியாகும் நேரம், சின்னக்
கல்லடியால் தரைவீழ்தல் போல்போ கின்றேன்!

☆ ஓலமிட்டே இடியொன்று வீழ்ந்த தாலே
உருவிழந்த நெடுமரமாய்ச் சாய்ந்து விட்டேன்!

☆ பாளம்போல் நிலம்வெடித்த பாங்காய், அந்தப்
பாவையினால் மனம்வெடித்த தால்போ கின்றேன்!

☆ குமைந்திருக்கும் பொற்கொல்லன் வீட்டிலுள்ள
கும்மட்டிச் சட்டியைப்போல் குமைந்திருந்தேன்!

☆ திகைப்பூண்டுச் செடிமிதித்தார் போலே இந்தத்
தேன்மலராள் திக்குதிசை புரிந்திடாது
நகைத்திட்டாள் தனக்குள் ளே!

☆ வான்பறவை போல்எனக்குச் சிறகு மட்டும்
வளர்ந்திருந்தால்.....

☆ .................... நீரில்
மண்பொம்மை கரைதல் போல் கரைவேன்."

☆ தமிழிணைந்த சுவைபோலே இணைந்து வாழ்வோம்!

☆ கிள்ளைமொழி தேன்மனைவி அணைப்பில் வீழ்ந்து
கிறுக்கனைப் போல் அவள்காட்டும் வழியில் வாழ்ந்து

☆ பொம்மைபோல் படுக்கை மேல் படுத்திருந்த
பண்ணரசை பூம்பாவை கண்டு கொண்டாள்!

☆ கரையுடைத்துக் கட்டுக்கு மீறிப் பாயும்
காட்டாற்று வெள்ளம்போல் உள்ளுக்குள்ளே
வரம்பின்றி நிறைந்திருந்த பாசம் பொங்கி

☆ பனிப்புகைக்குள் தெரிவதுபோல் நின்ற மங்கை
பொன்மலரை அடையாளம் கண்டு கொண்டான்!

☆ கண கணக்கும் பள்ளிமணி ஓசை போன்று
கற்பனைப் பேச் சில்வீடு கலந்த தம்மா!

☆ கன்னத்தில் கைவைத்துப் பூகம் பத்தில்
கருகியதோர் நகரம்போல் இடிந்து சோர்ந்தே

☆ .................... மாணிக்கவாசகர் தம்
இனியதிரு வாசகத்தால் உருகி னாற்போல்,

☆ புகைச்சுருட்டால் பழுத்துவிட்ட கிழவன் மீசை போல்,

☆ தேடி வரு கின்றார் என் பெற்றோர்; காய்ந்து
வறண்ட நிலம் போலான வாழ்வில் தோன்றும்
வளந்தட்டிப் பறிப்பதற்கே வருகின் றார்கள்!

☆ முத்துவுக்கே மணம்முடிக்க வருகின் றார்கள்!
இருண்டதொரு வீடாகும் இனிஎன் வாழ்க்கை

☆ ....................தென்றலாலே
கதிர்சாய்தல் போல் தலையைச் சாய்த்தே, அந்தக்
கன்னிமலர் தரைதழுவச் சாய்ந்த தம்மா!

☆ பாடலும் அத் தேனிசையும் இணைந்தாற் போலப்
பாவலனும் பசுங்கொடியும் தழுவிக் கொண்டார்!

☆ வள்ளுவனின் குறள்போல அடக்க மாக
வக்கணை யாய் நின்றிருந்த

☆ "பெண் எங்கே மாப்பிள்ளை எங்கே ?" என்று
பறப்பைபோல் அங்குமிங்கும் பறக்கலானார்!

☆ ஈச்சம் ஓலைபோல் பறந்தோடி வந்த பெற்றோர்!

☆ கோடைதந்த வெம்மையினால் வெதும்பிப் போன
குழந்தைபோல் பண்ணரசன் மடியின் மீதே
ஆடாமல் அசையாமல் கிடந்த மங்கை!

☆ ஒருணர்வும் அற்றுவிட்ட மரம்போல் ஆன
ஒளிமுகத்தான் வெலவெலத்துத் திகைப்பில் ஆழ்ந்தான்!

☆ மழைபொழியும் போதே அவ் வெயிலோன் வந்து
முகங் காட்டிச் சிரிப்பதைப் போல் சிரித்தார்.

☆ தழைசெடிகள் பூங்காற்றில் கலக லத்தே
தலையசைத்தல் போல் மகிழ்ச்சி......

மேற்கூறியுள்ள உவமைகள் வியப்புக்குறியை நம் மனத்தில் தோற்றுவிக்கின்றன. உவமைகளாலேயே இப்படி ஒரு குறுங் காவியம் இன்றுவரை பின்னப்பட்டு இருக்குமா? என்பது உலக அளவில் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் ஆராயப்பட வேண்டிய தொன்றாகும். இக்காவியம் தமிழில், உலக இலக்கியங்களில் இதுவரை கூறப்படாத புதுப்புது உவமை களாலேயே நடைமுறை நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தி புனையப் பட்டுள்ளது என்பதை பன்மொழிப் புலவர் கா. அப்பா துரையார் அவர்கள் தமது பண்புரையில் குறிப்பிட்டு, பின்பு கவிஞரை 'புதுமைக்கவிஞர்' என்று வியந்து புகழ்கின்றார்.

பேரெழுத்தாளர் திரு. அகிலன் அவர்களும் உவமைகளின் அழகைப் புகழ்ந்து கவிஞரின் வளர்ச்சி இன்றைய தமிழ்க் கவிதை இலக்கியத்தின் புது மலர்ச்சி என நூலின் சிறப்புரையில் நவில்கின்றார்.

எனவே, இதுகாறும் எக்காலத்தும், எல்லா வயதினருக்கும் பொருத்தமான முறையில் நிலைத்து நிற்கக்கூடிய இக் காவியத்தில் இப்பகுதியை இதுவரை எவரும் (உவமைகள்) ஆய்வு செய்யாதது வியப்பாக உள்ளது. எனவே, இலக்கிய வாதிகளும், பேராசிரியர்களும், ஆய்வாளர்களும் உலக அளவில், ஒப்பியல் நோக்குடன் ஆய்வினைத் தொடங்குவது என்பது தமிழினை தனது இதயத்துடிப்பாக கொண்டிலங்கும் கவிஞருக்கும், அவரது படைப்பினுக்கும் நாம் செலுத்தும் நன்றிக் கடனாகும்.

## புதிய உத்திகள்

இக்காவியம் முழுவதும் சத்தான வரிகளால் கவிதைகளை வடித்தெடுத்துள்ளார் கவிஞர். அதனால்தான் இக்குறுங் காவியம் உயிரோட்டம் மிக்கதாக உள்ளது.

கவிதை கவிதைபோல் இருத்தல் வேண்டும். பழமையில் புதுமை, புதுமையில் பழமை இரண்டையும் ஏற்று, அம் மரபில் சிறிதும் பிறழாது புதிய வடிவங்களை இக் காவியத்தில் தோற்று வித்துள்ளார். பழைய யாப்புத் தளைக்குள் முற்றிலும் முடங்காது, இனிய சந்தம் கொண்ட பாக்களை புதுமையான நோக்கில் யாத்துள்ளார் எழுச்சிக் கவிஞர் பொன்னடியான் அவர்கள். இப்பகுதியில் புதுமையும், புரட்சியும் போட்டியிடு கின்றன.

தன்னுணர்ச்சிப் பாக்களின் (Lyrics) மூலம் காதலின் ஏக்கத்தை பண்ணரசன், பொன்மலர் வாயிலாக வெளியிட்டு இதன்மூலம் தலைசிறந்து ஈடு இணையற்று விளங்குகிறார்.

*.......................................................*
*'கார்மேகம் போல்எந்தக் கணமும் வற்றாக்*
*கண்ணீரைச் சொரிகின்ற நிலையில் உள்ளேன்*
*சீர்மகளே! எனக்காகப் பிறந்தி ருந்தும்*
*சிந்தை – என் சிந்தைதனைச் சிதைய வைத்தல்*

*சரிதானா சரிதானா சரியேதானா ?*
*ஓரிதயம் உனக்காக ஏங்கி ஏங்கி*
*உயிர்வாதை படுவதுவும் முறையே தானா!*

என்ற பாடல் வரிகள் மூலம் வெளிப்படும், எண்சீர் விருத்தப்பாவின் புதுமை, உணர்ச்சியின் முத்தாய்ப்பான முழுமை வெளிப்பாடு இவ்விரண்டும் கவிஞரை புதுமையின் முன்னோடி எனப் பறைசாற்றி நிற்கின்றன.

☆ *என்னுயிரும், என்னுடலும் தவிக்கும் போதோ*
*எதை எழுத, எதைச் சொல்ல புரிய வில்லை!*

☆ *இத்தரையில் எனக்கினிமேல் அமைதி இல்லை!*
*எதை எழுத, எதைச் சொல்ல புரிய வில்லை!*

☆ *இங்கின்றோ கொடுமைச்சாக் காட்டில் சாய்ந்தேன்*
*எதை எழுத, எதைச் சொல்ல புரிய வில்லை!*

அழகான சொற்களைக் கோர்த்து, செம்மையான முறையில் இருவரின் வாயிலாகவும் மனஉணர்வுகளை படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

இக் குறுங்காவியம் முழுவதும் ஒருவகை எண்சீர் விருத்தத்தால் புனையப்பட்டுள்ளது. இதில் கவிஞர் வியக்கத் தக்க வகையில் புதுமையினை செய்துள்ளார். 'தமிழ் இலக்கிய உலகம்' கண்டிராத வகையில் 'காதல் ஏக்கத்தில்' உழலும் இருவரின் உணர்ச்சிப்பாங்கும், கதைப்பாங்கும் முற்றுப் பெறும் நிலையில்,

*'சரிதானா, சரிதானா, சரியே தானா ?' –(பண்ணரசன்)*

என்றும்,

*எதை எழுத, எதைச் சொல்ல புரிய வில்லை! – (பொன்மலர்)*

என்றும், ஏங்குகின்ற, உரைக்கின்ற, பின் தொடர்ச்சியாக நீண்டு, உணர்ச்சியுடன் கூடிய பாடல் வரிகளாக வெளிப்பட்டு வரும் இச்சிறப்பானப் பாங்கு படிப்போரின் நெஞ்சில் நிறைவை ஏற்படுத்தும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## கவி நயம்

காதல் என்பது மனிதனது பருவகாலங்களின் வசந்த கீதமாகும். மொட்டவிழ்ந்து மலராகும் பொழுது அவனது பருவ உணர்வுகள் மணம் பரப்புகின்றன. ஆண்டவனது படைப்பில் ஆண்-பெண் என்ற தத்துவத்தின் வித்தாகவும், வாழ்வுக்கும், வளமைக்கும் அடிப்படையாகவும் இக் காதல் அமைவதுண்டு. அனைத்து உயிர்களிலும் இக் காதலைக் காணமுடிகின்றது. திருவள்ளுவர்,

*நோக்கினாள் ; நோக்கி இறைஞ்சினாள்; அஃது அவள்*
*யாப்பினுள் அட்டிய நீர்'!*

என்று, யான் காணாத அளவில் அவள் என்னை அன்போடு நோக்கினாள். நான் அவளைப் பார்த்தபோது நாணித் தலை குனிந்தாள். அந்தக் குறிப்பு இருவரிடையும் தோன்றிய அன்புப் பயிர் வளர அவள் வார்த்த நீராகும் என்றும்,

*'மலரினும் மெல்லியது காமம்'* ! என்றும் கூறுகிறார்.

*'தண்டையிலே பாட்டும் – உன்*
*தாழ் அடியில் கூத்தும்*
*கண்டவுடன் காதல் – நான்*
*கொண்டேனே உன்மேல்'*

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் சிருங்காரச் சுவையுடன் பாடுகின்றார்.

*'நெஞ்சைப் பறிகொடுத்தேன், பாவியேன்"*, என்று பாரதியார் பாடுகின்றார்.

*'தூண்டிற் புழுவினைப் போல் – வெளியே*
*சுடர் விளக்கினைப் போல்*
*நீண்ட பொழுதாக – எனது*
*நெஞ்சம் துடித்த தடீ!*

என்று காதல் கொண்ட பெண்ணைப் பற்றி இவரும் சிருங்கார சுவையுடன் பாடுகின்றார்.

காதலைப் பற்றி மேனாட்டு அறிஞர்கள் பலரும் பலவாறாகக் கூறுவர்.

*'சொர்க்கத்திலிருந்து வந்த ஒளிக் கற்றை'* - என்பார் பைரன்.

*'சொர்க்கம் கொடுத்த பரிசு'* - என்பார் தாமஸ் கேம்பெல்.

*'மகிழ்ச்சியின் உயர்ந்த சொர்க்கம்'* - என்பார் சாட்டர்சன்.

*'அழகுமிக்க கனவு'* - என்பார் வில்லியம் சார்ப்.

*'ஒரு வகையான போர்முனை'* - என்பார் ஓவிட்.

*'இது ஒரு பைத்தியக் காரத்தனம்'* - என்பார் ஷேக்ஸ்பியர்.

*'காதல் என்பது தேன்கூடு'* - என்பார் கண்ணதாசன்.

எவ்வாறு இருப்பினும் காதலினால் அனைத்தையும் பெறுகிறோம் என்பதுதான் சிறப்பானது ஆகும்.

மேற்கூறியவைகளின் அடிப்படையில் இக் குறுங் காவியம் அமைந்துள்ளமை போற்றற்குரியது ஆகும். இக் காவியத்தில் இடம்பெற்றுள்ள காதற்பாக்கள் கவித்திறம் மிக்கனவாகவும், காதற் சுவை மிகுந்தும் காணப்படுகின்றன.

படிப்பவர்களின் மனத்தை மோகமுட்களால் தாக்கும் வண்ணமும், கவரும் வண்ணமும் சுவைபட கவிஞர் புனைந் துள்ளார். ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ் வொர்த் இயற்கையின் ரகசிய அழகினைப் பாடினார். இஃ கவிஞரோ வாழ்க்கையின் ரகசிய அழகினைப் பாடியுள்ளார். காவியத்திற்குரிய அனைத்துக் கூறுகளையும் பெற்றுச் சிறந்து விளங்குகிறது இக் குறுங் காவியம்.

காதற் பாடல்களில் காதல்தான் மூலப்பொருள் என்றாலும் எல்லா சுவைகளும் சரியான விகிதத்தில் கலந்திருந்தால்தான் வாழ்வு இனிக்கும் என்பதை,

'சிங்குழலாள் பண்ணரசன் மோவாய் நீவிச்
சிணுங்குவதும், கொஞ்சுவதும் குடும்பக் காட்சி!'

என்கிறார் கவிஞர்.

'மாராப்புச் சேலைக்குள்ளே ரெண்டு
மாங்கனியும் இருக்கக் கண்டேன்'

என்று தலைவன் மகிழ்வது இன்பத்தை வெளிப்படுத்து வதாகும். இவ்வரிகள் நாட்டுப்புறக் காதற்பாடலைச் சார்ந்தது. இதனடிப் படையில் கவிஞர்,

'நச்சுக்கண் மன்தர்களோ பார்க்கா நேரம்
நறுமலராள் கரம்பற்றி மணம்நு கர்ந்து
கச்சுக்குள் கட்டுண்ட ஒன்றை எண்ணி
'கண்ணேபால் வேண்டுமென்பான்' சிரித்துக்கொண்டே!

என்று கூறுவது எண்வகைச் சுவைகளுள் ஒன்றான இன்பச் சுவையை உணர்த்துவதாக உள்ளது. மேலும் முற்பகுதியில் காதலை இழந்த துயரத்தினை ஈடு செய்வதற்குப் பிற்பகுதியில் இதுபோன்று உரையாடல்கள்வழி தமது இதய எழுச்சிகளை சீர்செய்து கொள்கிறார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது.

மேலும் கவிஞர் ஒவ்வொரு சொல்லையும் செதுக்கித் தந்த ஒரு சிற்பியாக மிளிர்கின்றார். காதற் சுவையினை, குழைவுடன் அளிப்பதில் வல்லவர் என்றே இயம்ப வேண்டியுள்ளது.

எதுகையும், மோனையும் இணைந்து இலக்கிய )ன்பத்தைப் படிப்பவர்கள் மனத்தில் தோற்றுவிக்கின்றது.

புதுவாழ்வுக் கனவு கண்டு அதில் தோற்றுப்போன பண்ணரசன்,

*'முத்தாய்ப்பு வைத்துவிட்டேன் என்வாழ் விற்கே*
*முறையாகச் சிந்தித்தே முடிவை ஏற்றேன்!'*

என்ற வரிகள் காதல் சோகத்தை பிரதிபலிப்பதாக உள்ளது.

தூய காதலுக்காக அனைத்தையும் துறந்து பண்ணரசனின் கண்விழிப்பினை எதிர்ப்பார்த்துக் காத்திருக்கும் பொன்மலர்

*'இன்னுயிரின் வேர்காக்க மருத்துவர்கள்*
*எடுத்திட்ட முயற்சிகளோ வென்றி ருந்தால்*
*என்னாவி என்னுடலில் தங்கும்; இல்லை*
*எடுத்தெறிந்து விடுவேன் என் உயிரை...'*

என்றும்,

*'.......................பிழைத்து விட்டால்*
*தமிழிணைந்த சுவைபோலே இணைந்து வாழ்வோம்!'*

என்றும் கூறும் சொற்கள் உண்மையான காதல் உணர்வை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

ஒரு நோயாளியின் மறுபிறப்புத் தெய்வம் மருத்துவர்கள் என்பதை,

*'உறங்காமல் செயல்பட்ட மருத்துவர்கள்*
*கண்டுகளித் தார்கவிஞன் விழித்தி றப்பை;*
*கனிக் கவிஞன் உயிர்மூச்சின் மறுபிறப்பை!'*

என்பதை இவ்வரிகள் எடுத்துக்காட்டுகின்றன.

'எம்மதமும் சம்மதம்', என்று கலப்பு மணத்தை ஆதரிக்கும் தந்தை,

*'முப்பழச்சாறாம்தமிழில் மூழ்கும் பிள்ளை*
*முழுப் பொருத்தம் என்மகளில் மூழ்கல்'*, என்கிறார்.

காதல் மணம் பெருக வேண்டும் என்ற நல் எண்ணத்தைக் கொண்டிலங்கும் பொன்மலரின் தந்தை, திருமணத்தை உறுதி செய்கிறார், எவ்வாறெனில்,

***'மாப்பிள்ளை இனிநீங்கள் எங்கள் வீட்டு***
***மறுபிள்ளை! என்மகள் உம் செல்லப் பிள்ளை!'***

என்றும்,

***'மென்தோளும் வன்தோளுங் கலக்க வைப்போம்***
***அகத்துறையும், புறத்துறையும் பிணைந்த வாழ்வே,***
***அன்பூறும் பேரின்ப வாழ்க்கை யன்றோ ?'***

என்றும்,

***'கதலிமகள், காளைமகன் சேர்ந்தவாறு***
***களிப்போடு வருங்காட்சிக் கலைக்கண் காட்சி'***

என்றும் கூறி, புரட்சிகரமான செயலுக்கு வித்திடுவது காவியத்தின் வெற்றி எனலாம். இத்தகைய **கவிநயத்துடன்** காப்பியத்தைப் படைத்துள்ளார் கவிஞர்.

## வாழ்வியல் சிந்தனைகள்

இக்காவியத்தில் கவிஞர் வாழ்வியல் சிந்தனைகளை அழகான 'வரிகளால் படம் பிடித்துக் காட்டுகின்றார். இவ்வரிகளில் கவிஞரின் தனித்தன்மையும், ஆளுமைத் தன்மையும் புலனாகின்றன.

*'சித்தன் – என் துறணர்வைக் கலைத்து விட்டாய்!*
*அருள்வடிவே! என் இறைவி பித்தனா னேன்!*
*அருள்வேண்டும்! உன் அருளால் மீட்சி வேண்டும்!'*

என்று காதலியை நினைத்துப் பாடிய காவியத் தலைவன் பண்ணரசன் தான் தன் காதலை இழக்க வேண்டிய தருணத்தில்,

*'என்னாசைக் கனவுகளே கலைந்து போங்கள்'* என்று வெறுப்பின் உச்சிக்கே சென்று, மனம் வெதும்பி,

*(i)* *நாய்களுக்கும் பற்றுப்பா சங்க ளுண்டு*
*நல்லறிவு மனிதர்கட்கோ எல்லாம் வேடம்!*

*(ii)* *விரும்புவது கிடைப்பதில்லை; கொஞ்சங் கூட*
*விரும்பாது நாம் ஒதுக்கித் தள்ளும் ஒன்றோ*
*விரும்பிவந்து மடிபுரளும்; இதுதான் வாழ்க்கை!*

*(iii)* *நம்மோடு நேற்றிருந்தோர் இன்றோ இந்த*
*நிலத்திற்கும் நெருப்பிற்கும் சொந்த மாகித்*
*தும்மிமுடிப் பதற்குள்ளே மறைந்து போகும்*
*துயர் வாழ்வு....................!*

என்று காதலியை மறக்க நினைக்கும் போது கூறும் சொற்கள் மனத்தில் அழியா ஓவியம் போல் நிலைப்பெற்று நிற்கக் கூடியவையாகும்.

சதிகார உலகம் குறித்து கவிஞர் கூறும் கூற்று அக்கினிப் புனலில் தோன்றியதாக உள்ளது.

*'நோய் நொடியில் இயங்குகின்ற உலகம் இந்த*
*நுரையுலகம்; அணுத்திரட்சித் கொள்கைக் குள்ளே*
*பாய் விரித்துப் படுத்துறங்கும் உலகம் இந்தப்*
*பழியுலகம்...... ....... ...... ............. ...............!'*

இவ்வாறு கவிஞர் தற்கால நிலையை உணர்த்திச் சாடுகின்றார். மேலும் உலகை ஆக்கும், அழிக்கும் அணுவியல் தத்துவத்தையும்

அறிவியல் பூர்வமான ஒரேவரியில் படம்பிடித்துக் காட்டுகிறார்.

இத்தத்துவ வரிகள் அனைத்தும் மகரந்தம் பொதிந்த சந்தன வரிகளாகும் என்றால் மிகையாகாது.

*'கலப்பு மணம் ப்ரவட்டும் இந்த நாட்டில்*
*காதல் மணம் பெருகட்டும் இந்த நாட்டில்!'*

*'மணக்கட்டும் தமிழ் – தமிழர் புகழ்இவ் வையம்!*
*மறுமலர்ச்சி பூக்கட்டும் ஏழை வாழ்வில்!'*

என்ற வரிகள் ஏக்க எழிலோவியங்களுக்கு சரியான வாழ்க்கைப் பாதையினை நிர்ணயிக்கின்றது. அனைவரும் வேறுபாடுகள் காணாது, முக்கியமாக கவிஞர்களாவது தங்கள் வாழ்வில் காதல் மணத்தை, கலப்பு மணத்தை மேற்கொண்டு சீர்திருத்தப் போக்கில் செல்லவேண்டும் என்ற தனது எண்ணத்தின் வெளிப்பாட்டில், கதாப்பாத்திரங்கள் மூலம் தெளிவாக்கி யுள்ளமை இக்கால மக்கள் அனைவரின் மனத்திலும் பதிவாக வேண்டிய பொன் எழுத்துக்களாகும். இவ்வரிகள் இவரை 'மறுமலர்ச்சிக் கவிஞர்' என இலக்கிய உலகில் ஏற்றம் பெற வழி கோலுகிறது. இந்த முற்போக்கு எண்ணம் இருப்பதனாலேதான் ஐ.நா. பண்பாட்டுக் கழகம் 'அழுத்தப்பட்ட மக்களுக்காகப் பாடும் எழுச்சிக் கவிஞர்', என்ற பட்டம் அளித்துச் சிறப்பித் துள்ளது.

## பன்முகப் பார்வைகள்

### இலக்கியப் பார்வை

இன்றைய நவநாகரிக உலகம் வேகமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. "எந்திரத் தனமான உலகில், எந்திரங்களைப்

பிடிப்பவர்கள்கூட தங்கள் தொழில்களுக்கிடையிலும் குழலோசை களைக் கேட்க விரும்புகின்றனர்", என்பார் மரியாலீச். பாடல் களில், காவியத்தில் உள்ள இலக்கிய இன்பத்தை இலக்கிய ரசனை உள்ளவர்கள் மட்டுமே அனுபவிக்க முடியும். அப்படிப்பட்ட அனைத்து இலக்கிய இன்பங்களையும் ஒரு சர கொடுக்கக்கூடிய ஒரே குறுங்காவியம் என்று போற்றப் டும் வகையில் கவிஞர் பொன்னடியான் அவர்கள் இக்குறுங் காவியத்தை எழுதியுள்ளார்.

### கற்பனை

*☆ 'புன்னகையே தவழும் உன் பூமுகத்தைப்*
*பூக்காடே! நான் காணவேண்டும் மீண்டும்*
*☆ பாடிவந்த தேனாறே! பருவம் தோய்ந்த பனிமலரே!'*

என்று கற்பனை நயம் தோய்ந்த கணக்கற்ற வரிகளால் காவியத் தைப் பாடியுள்ளார்.

### சொல்லாட்சி

*'கரையின்றி ஆறில்லை! மறையா இன்பக்*
*கவிதையின்றி இலக்கியமும் பூப்ப தில்லை!*
*கனிச்சாறே நீயின்றி நானும் இல்லை!'*

என்பன போன்ற வரிகளில் சிறந்த சொல்லாட்சியைக் காண முடிகிறது.

### மோனை நயம்

*'இற்றுவிடும் என் வாழ்வு! உடனே உன்றன்*
*இதயத்தின் பதில் தேவை, பதில்தான் தேவை!'*

என்பன போன்ற பாடல் வரிகளில் மோனை நயம் முழுவதுமாக முகம் காட்டுகிறது.

**எதுகை நயம்**

*'முற்றிவந்த நம் உறவில் பிரிவுத் துன்பம்*
*முளைத்ததென்பேன்! இருக்கட்டும்; அதனால் என்ன ?*
*இற்றுவிட வில்லையது கண்ணே! நூலின்*
*இழைபோல அவ்வுறவைப் பேணிக் காப்போம்!'*

இப்பாடலில் எதுகை நயம் நடமிடுகின்றது.

**உவமை**

*'காத்திருப்பேன்! பல நூறு ஆண்டா னாலும்*
*கரிகாலன் கல்லணையின் சிலையைப் போலே*
*காத்திருப்பேன்! உலகோர்க்கே அஞ்சிடாது......!'*

இக்காவியப் பாடல்கள் உவமைகளாலேயே சிறப்பு எய்துகிறது.

எண்வகைச் சுவைகளும் இலக்கியத்துக்கு மிகவும் இன்றியமையாததொன்றாகும். இச்சுவைகள் பெரும்பாலும் காதற் பாடல்களில் பின்னிப் பிணைந்திருப்பதைக் காணலாம்.

*'முகத்தில்பரு முளைத்தது ஏன் தோழா! எந்த*
*முத்தழகி மேல்மோகம் வைத்தாய்'' என்றே*
*எகத்தாள மாய்க் கேட்டே எனது தோழர்*
*இல்லாத கேலியெல்லாம் பேசு கின்றார்!'*

என்று பண்ணரசன் கூறுவது **நகையையும்,**

*'தேம்பாமல் அழுதழுது வீங்கும் கண்கள்*
*சிரங்காகிப் புண்ணாகிச் சிவந்தி ருக்கச்*
*செம்மை மொழி பொன்மலரோ துவண்டி ருந்தாள்!'*

என்று பொன்மலர் தேம்புவது **அழுகையையும்,**

*'கன்னத்தில் கைவைத்துப் பூகம் பத்தில்*
*கருகியதோர் நகரம்போல் இடிந்து சோர்ந்தே*

*என்னத்தைச் செய்வதெனப் புரியா வண்ணம்*
*ஏமாற்றத்தில் மூழ்கிக் கிடந்த தந்தை!'*

என்ற வரிகள் **திகைப்பினையும்,**

*'மகள் முகத்தைக்*
*கண்ணாரக் காண்பதற்குத் துடிக்கும் அன்னார்*
*கருணை மனத் திற்கு உவமை தேடு கின்றேன்!'*

என்று கவிஞர் பாடுவது **வியப்பையும்,**

*"................கீட்ஸ் கூட*
*ஒருத்தியைத் தான் காதலித்தான் மடல் வரைந்தான்*
*இளகவில்லை பேய்மகளின் நெஞ்சம்....*
*............. ................ ................ உருக்கி நோயால்*
*பிளந்த தொரு மலைபோலே மாண்டு போனான்*
*பிறகும்அவ் வரலாறு நீள வைத்தல்*
*சரிதானா, சரிதானா, சரியேதானா?"*

என்ற வரிகள் **வெகுளியையும்,**

*"முத்துவுக்கே மணம் முடிக்க வருகின் றார்கள்!*
*இருண்டதொரு வீடாகும் இனிஎன் வாழ்க்கை"*
*என எண்ணிக் கால்நடுங்கக் கலங்க லானாள்!*

என்ற வரிகள் **அச்சத்தையும்,**

*"மாப்பிள்ளை இனி நீங்கள் எங்கள் வீட்டு*
*மறுபிள்ளை! என்மகள் உம் செல்லப்பிள்ளை!"*

என்று தந்தை கூறுவது **பெருமிதத்தையும்,**

*"பிழியாத உன்சிவந்த இதழ்ப் பழத்தில்*
*பிழிந்தெடுத்த கனிச்சாறே உண்பேன்; கண்ணே"*

என்ற வரிகள் **இன்பத்தையும்,** வெளிப்படுத்துகிறது. இதுபோன்று எண் வகைச் சுவைகளும் இக்காவியத்தில் மலர்ந்து சுவையூட்டு கின்றன.

## சமுதாயப் பார்வை

காதற் பாடல்கள் மூலம் சமுதாயப் பின்னணிகளையும், நிலைமைகளையும், மனஉணர்வுகளையும், சமுதாய ஏற்றத் தாழ்வுகளையும், சாதி வேறுபாடுகளையும், மொழியறிவினை யும், பழக்க வழக்கங்களையும், பண்பாட்டுக் கூறுகளையும் அறிந்து கொள்ளலாம்.

*"உடம்பிளைத்து விட்டதுவே! பாலில் முட்டை*
*ஒவ்வொரு நாளுங்கலந்தே உண்டு வந்தால்*
*உடல்தேறும்! தயிர் மோரும் பழங்களும் நீர்*
*உணவில் அதிகம் சேர்க்க வேண்டும்"*

என்ற வரிகள் அன்று முறையாக உடல் நலன் போற்றிய பாங்கு தெரிய வருகிறது.

*"சாதி வெறியு, மதவெறியும் மூடப்போக்குச்*
*சண்டாளர் பழம் வெறியும் நமக்குள் இல்லை"*

என்ற வரிகள் சமய வேறுபாடற்ற சமுதாயம் மலரவேண்டு மென்ற கவிஞரின் சமதர்மக் கொள்கை இதன்மூலம் நிலை நாட்டப்படுகிறது.

*"தமிழ் ஒளியும் இப்படித்தான் ஒருத்தி யின்மேல்*
*தணியாத அன்பு வைத்தான்; காதலித்தான்*
*................... ..................................................*
*சாகும்வரை அவள் நினைவாய்ப் போனான் அன்பன்!"*

(புரட்சிக் கவிஞரின் பரம்பரைக் கவிஞர்களில் மூத்தவரும், தன் அன்பில் கலந்தவருமான கவிஞர் தமிழ் ஒளியின் அகத்துறை வாழ்வையும் கவிஞர் அறிந்திருக்கிறார் என்பதோடு அவர் நலனில் அக்கறையும் கொண்டிருந்தார் என்பதனையும் இவ்வரிகளின் மூலம் அறிகின்றோம்.)

*"கீட்ஸ்கூட ஒருத்தியைத்தான் காதலித்தான் – மடல்வரைந்தான்*
*இளகவில்லை பேய்மகளின் நெஞ்சம்; ஏங்கி*
*இருபத்தேழாம் வயதில் உருக்கி நோயால்*
*பிளந்ததொரு மலைபோலே மாண்டு போனான்!"*

ன்ற வரலாற்று நிகழ்வுகளையும் அறிந்து கொள்ள முடிகிறது.

*"சாயர்புரம் குமாரபுரம் கண்ண நல்லூர்*
*சாத்தான்குளம் குமாரகிரி ஆராம் பண்ணை*
*தூயபண்பு நாசரத்தூர்; நாணல்காடு*
*துவளாத நாங்குனேரி மீளவிட்டான்*
*தேயாத புகழுடைய பழைய காயல்*
*திறன்மிகுந்த பழங்கோட்டை போன்ற ஊரார்*
*வாயாடிக் கிடந்தார்கள்;"*

என்ற வரிகளின் மூலம் ஊர்களின் பெயர்களையும் எதுகை மோனை பிறழாமல் ஓசை நயத்துடன் பாடி நம் உணர்வுகளைத் தொடுகின்றார்.

## மொழியியல் பார்வை

இக்காவியத்தில் வட்டார வழக்குகள், பேச்சுத் தமிழ், திரிந்த சொற்கள், பிறமொழிச் சொற்களும் காணப்படுகின்றன. இத்துடன் புதிய சொல்லாக்கமும் உருவாக்கப்பட்டுள்ளன.

## பேச்சுத் தமிழ்

இக்காவியத்தில் பறப்பை, ஒருவளை, கோது, என்னத்தை, தொண தொணக்கும், நச்சரிப்பால், வெலவெலப்பு போன்ற பல பேச்சுத்தமிழ் சொற்கள் வந்துள்ளன.

## அடுக்குத் தொடர்

சரிதானா, சரிதானா
தவிக்கின்றேன், தவிக்கின்றேன்
நடக்கின்றேன், நடக்கின்றேன்
ஏங்கி, ஏங்கி

## இரட்டைக் கிளவி

கலகலப்பு, துருதுரு, வெலவெலப்பு
தொண, தொணக்கும்.

## பிறமொழிச் சொற்கள்

கார், ரப்பர்குழாய், ஸ்டேன்லி மருத்துவமனை, மிஜிமைடு, பெமிகிரைடு (ஊசி மருந்து) ஆகியவை எதுகை மோனைக்கு இயைந்து இடம் பெற்றுள்ளன.

## ஒப்பியல் பார்வை

உலக அளவில் புகழ் பெற்ற கவிஞர்களின் படைப்பு களோடு ஒப்புமைப்படுத்தி ஆராய வேண்டிய அனைத்துக் கூறுகளையும் பெற்றுள்ளது இவ்வுயர் குறுங்காவியம்.

## ஆய்வு முடிவுரை

இக்காவியத்தில் உயிரோட்டம், உணர்ச்சித் துள்ளல், கற்பனை நயம், கருத்தாழம், வனப்பின் வடிவம், மறுமலர்ச்சிப் போக்கு, காதற்குழைவு, சந்த உத்திகள், கவிநயம், உவமை நயம், வருணனை நயம், புதுமைப் போக்குகள் அனைத்தும் ஒரு சேர மிளிர்கின்றன. அடிக்கொரு உவமை கொடுத்து சொல்லழகில் சொக்கவைத்திருக்கும் மாபெருங் கவிஞர். 'உவமையே இல்லாத உயர் கவிஞர்' என்றே இவரைப் போற்றுதல் வேண்டும்.

ஒவ்வொரு பகுதியும் உலக அளவில் இவரது இக்காப்பியத்தை ஆராய்ச்சி செய்து மேலும் புதுக் கருத்துகளையும், கவிஞரின் மெய்யான, தமிழர்களுக்காகப் படைத்திருக்கும் இப்படைப் பின் செயல்பாட்டினை, சிறப்பம்சங்களை வெளிக் கொணரு தல் வேண்டும். ஏனெனில், எத்தனை ஆண்டுகள் ஆனாலும் காதல் உணர்ச்சிப்பாங்கு உண்மைப் பாங்கு, எழுச்சிப் பாங்கு குறையாமல் இருக்கக்கூடிய அளவிற்கு துடிப்பு மிகு வரிகளால் புனையப்பட்ட புதுக்காவியம் கவிஞர் பொன்னடியான் அவர்களின் **'ஓர் இதயத்தின் ஏக்கம்'** என்ற அரிய பொக்கிஷம். ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் ஆய்வுக்கடலில் மூழ்கி குளித்து முத்தெடுத்து கவிஞரின் புகழை உலக அளவில் நிலை நிறுத்தவேண்டும்.

**ஆர். இந்திராபாய்**

எம்.ஏ., எம்.எட்., எம்ஃபில்.,

**துணைநூற்பட்டியல்**

1. தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள் - **டாக்டர் சு. சண்முக சுந்தரம்**

2. காதல் வாழ்வு - **டாக்டர் தமிழண்ணல்**

3. இலக்கிய மரபு - **டாக்டர் மு.வ.**

4. தமிழ் இலக்கிய வரலாறு

# புரட்சிக் கவிஞரின் தீர்க்க தரிசனம்!

**கடலூர் எம்.கே. மூர்த்தி**

*புரட்சிக் கவிஞர் இல்லத்தில் (10, இராமன் தெரு, தியாகராய நகர், சென்னை 17) தமிழ்க் கவிஞர் மன்றம் தொடங்கப்பட்டுள்ளது. தொடக்க விழாவில் கவிஞரின் இல்லத்தில் உள்ள பெரிய முற்றத்தில் கவிஞர்கள் கூடியுள்ளோம். அனைவரையும் இளஞ்சிட்டாக ஓடி ஓடி வரவேற்கிறார் கவிஞர் பொன்னடியான். பல ஆண்டுகள் பழகிய அன்போடு அவர் வரவேற்று உபசரித்த உபசரிப்பு இன்றும் மனக்கண் முன் நிற்கிறது. புரட்சிக் கவிஞர் புலி பாய்வது போல் அமைந்துள்ள வெளிநாட்டுப் பட்டு விரிப்புக்கு முன் அமர்ந்திருக்கிறார். அவர் வலது பக்கத்தில் பாரதியார் மகள் செல்லம்மா பாரதி அமர்ந்து பாவேந்தரோடு அன்போடு பேசிக் கொண்டிருக்கிறார். அவர் பார்வை சரியாகத் தெரியாத நிலை. அவருடன் அவர் கணவரும் வந்திருக்கிறார். இடது பக்கத்தில் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் வீற்றிருக்கிறார்.*

*கூட்டம் தொடங்கிய உடன் எல்லாரும் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளும் சடங்கு நடக்கிறது. முற்றத்தின் ஓரத்தில் கவிஞர் முருகு சுந்தரம், கவிஞர் நா.க. முத்தையா 'பக்கத்தில் உட்கார்ந்திருந்த பொன்னடி' தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளாமல் உள்ளே விருந்து ஏற்பாடுகளைக் கவனிக்கும் சாக்கில், மறைந்து விடுகிறார். இதைப் புரட்சிக் கவிஞர் கவனிக்காமல் இல்லை. அடுத்து தேர்தல் நடக்கிறது. புரட்சிக் கவிஞர் தலைவராகவும், நாரண துரைக்கண்ணன் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டபின் ஆட்சிக்குழு உறுப்பினர் தேர்தல் நடக்கிறது. திரு. நாரண துரைக்கண்ணன் நின்று கொண்டு பெயர்களை எழுதுகிறார்.*

*அந்த நேரத்தில், "பொன்னடி" என்று இடியென முழங்கிக் குரல் கொடுக்கிறார் பாவேந்தர். பொன்னடி, "அய்யா" என்று ஓடி வந்து பாரதியார் மகள் பக்கத்தில் நிற்கிறார். "எங்க போன-சரி இப்படி உட்கார்" என்று தன் பக்கத்தில் சாடை காட்டுகிறார். பொன்னடி உட்கார்ந்தவுடன், "அதுல பொன்னடி பேரு இல்ல?" என்று கேட்கிறார். (அதாவது ஆட்சிக்குழு உறுப்பினராக அவரைத் தேர்ந்தெடுக்க வில்லையா? தேர்ந்தெடுங்கள் என்பது அதன் பொருள்) உடனே, "பொன்னடியான்" என்று அவர் பெயரை முன்மொழிகிறார்கள். உடனே புரட்சிக் கவிஞர், "பொன்னடியான் இல்லை- பொன்னடி" என்று கணீர்க்குரலில் திருத்தம் செய்கிறார். இந்த மன்றம் தொடங்கு வதற்குக் காரணமாக இருந்து, நாளை இந்த மன்றத்தைக் கட்டிக்காக் கின்ற பொறுப்பேற்கப் போகின்றவன் இப்படி அறிமுகப்படுத்தியும் கொள்ளாமல், தேர்தல் நேரத்திலும் மறைந்து நிற்கிறானே என்ற தீர்க்கதரிசன உணர்வோடு பொன்னடியை அன்று அழைத்த புரட்சிக் கவிஞரின் அழைப்பொலி இன்றும் என் காதில் எதிரொலிக்கிறது.*

# கவிஞரின் வாழ்க்கைப் பாதை

கவிஞர் பொன்னடியான் கவிஞர்களை உருவாக்கும் கவிஞர் என்னும் புகழ்பெற்றவர்; தமிழகத்தின் பெருமை மிகுந்த, தகுதிவாய்ந்த கவிஞர்களின் குறிப்பிடத்தக்கவர் இவர்.

பள்ளி ஆசிரியர் திரு. வி.டி. நாதன், அன்னம்மை ஆகியோரின் முதல்மகனாக 4-6-1940 ஆம் ஆண்டு பிறந்தவர். இவர் சாதி, இன வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்ட சமத்துவச் சமுதாய அமைப்புக்கு உழைப்பவர்; இன்றைய இளைஞர்க்கு வழி காட்டும் பகுத்தறிவுப் பண்புப் பலகணி.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரிய மாணவராக (1960-ஆம் ஆண்டு முதல் பாவேந்தர் இறுதி நாள் வரை) விளங்கியவர்.

மாணவர் தலைவராக விளங்கியபோது, பொது நலன், தமிழ் நலன் தழுவிய பல போராட்டங்களில் ஈடுபட்டு, எத்தகைய எதிர்ப்புக்கும் அஞ்சாமல் செயல்பட்டவர்.

தமிழ்க் கவிதை இலக்கிய மறுமலர்ச்சி இயக்கமாகவும், இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ச்சங்கமாகவும் விளங்குவது பாவேந்தர் தொடங்கிய தமிழ்க்கவிஞர் மன்றம், பாவேந்தரோடு இவர் இருந்த காலந்தொட்டு அம்மன்றத்தைக் கட்டிக்காத்து, நாடு தழுவிய கலை இலக்கிய இயக்கமாக உயிர்த்துடிப்போடு நடத்தி, அதன் பொதுச் செயலாளராக விளங்கி வருபவர்.

1966 ஆம் ஆண்டு முதல் 'முல்லைச்சரம்' எனும் இலக்கிய ஏட்டினைத் தொடங்கி, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தி, எண்ணற்ற கவிஞர்களை, எழுத்தாளர்களை, பத்திரிகையாளர்களை ஆராய்ச்சியாளர்களை உருவாக்கி, ஊக்கமூட்டி, வளர்த்து வருபவர்.

1971 ஆம் ஆண்டு உலகக் கவிதை இலக்கியத்துறையின் திருப்புமுனை நிகழ்ச்சியாக விளங்கும் கடற்கரைக் கவியரங்கைத் தொடங்கி, இன்றுவரை நடத்தி வருவதோடு, தமிழகத்திலும் பிறமாநிலங்களிலும் பல திறந்த வெளிக் கவியரங்கங்கள் தோன்ற முன்னோடியாகத் திகழ்பவர்.

தமிழகத்தின் பலதுறை அறிஞர் பெருமக்களாலும், பத்திரிகை உலகினராலும், பலதுறை அமைப்புக்களாலும் பாராட்டப்பட்டு வரும் கவிஞரின் பணியைச் சிறப்பிக்கும் வகையில் 25 முத்தமிழ்க் காவலர்

கி.ஆ. பெ. அவர்கள் தலைமையில் பன்மொழிப்புலவர் அப்பாத்துரை அவர்கள் முன்னிலையில் 'இலக்கியப்பணி வெள்ளிவிழா' 24-2-85-ஆம் நாள், மயிலை பாரதிய வித்யா பவனில் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

புதுமைக் கவிஞர், எழுச்சிக் கவிஞர், உணர்ச்சிக் கவிஞர், புரட்சிக்குயில், மக்கள் கவிஞர், செந்தமிழ்ப் பாமணி போன்ற பல பட்டங்கள், பல அமைப்புகளால் அளிக்கப்பட்டு, பெருமைப் படுத்தப்பட்ட கவிஞரின் புகழ் பெற்ற நூல்கள்: 'ஓர் இதயத்தின் ஏக்கம்', 'பனிமலர்', 'பொன்னடியான் கவிதைகள்' (இரண்டு தொகுப்புகள்) 'ஒரு கைதியின் பாடல்கள்', 'பறக்கத் தெரியாத பட்டாம்பூச்சிகள்', அரங்கேற வருகின்ற அன்னப் பறவைகள்', 'நினைவலைகளில் பாவேந்தர்' முதலியன.

கவிஞரின் கவிதைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு "A Glowing Fire" என்ற நூல் வடிவம் பெற்றுள்ளது. இரானிய புரட்சிக்கவிஞர் அரஷ், பெர்ஷியன் மொழியில் மொழிபெயர்த்துள்ள கவிஞரின் கவிதை நூல் 'பாதகத்தை எதிர்த்துப் பாடல்கள்' என்பதாகும்.

கவிஞரின் படைப்புகளை ஆராய்ச்சி செய்து பலர் பல்கலைக் கழகப் பட்டங்களைப் பெற்று வருகின்றனர்.

1969 ஆம் ஆண்டு கவிஞரின் கவிதை இலக்கியப் பணிகளைப் பாராட்டி, ஐ.நா. பண்பாட்டுக் கழகம் 'அழுத்தப்பட்ட மக்களுக்காகப் பாடும் உணர்ச்சிக் கவிஞர்' என்ற பட்டத்தை அளித்துச் சிறப்பித்தது.

29-2-78 ஆம் நாளிட்ட நடுவணரசின் ஆணைப்படி, தமிழ்த் திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினராகக் கவிஞர் நியமிக்கப் பட்டார். ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டின் பொதுக்கூட்டக்குழுச் சிறப்பு உறுப்பினராகவும், பாரதி நூற்றாண்டு விழாக்குழு உறுப்பினராகவும் தமிழக அரசால் நியமிக்கப்பட்டார்.

1990 ஆம் ஆண்டு பாவேந்தர் நூற்றாண்டு விழாவில் தமிழக அர சால் 'பாரதிதாசன் விருது' வழங்கிச் சிறப்பிக்கப்பட்டார்.

கவிதை இலக்கியத்துறையில் தமக்கே உரிய தனிவழியில் நடைபோடும் கவிஞர், தமிழ்த் திரைப்படத் துறையிலும் நெஞ்சில் நிலைக்கும் பல நல்ல பாடல்கள் எழுதி வெற்றியுலா வருகிறார்.

கவிஞரின் துணைவியார் திருமதி இந்திரா அம்மையார் நீர்ப் பகுப்பாய்வுத் துறையின் தலைவர் கவிஞரின் இலக்கியப் பணிகட்கு நல்ல துணையாகவும் விளங்குகிறார். கவிஞருக்குப் பொன்மலர், லெனின்குமார் எனும் மகளும், மகனும் உள்ளனர்.



